# கல்கி

KALKI 26.1.2003
ரூ. 6.00


கண்ணகி பராக்!



ஒரு ஜாலி ரவுண்ட்-அப்

# உள்ளம் கேட்குமா மோர்?



**தேவி சங்கம் உதயம் அகஸ்தியா மாயாஜால்**

4 காட்சிகள்

விக்ரம்

A.M.ரத்னம்

வழங்கும்

ஸ்ரீ சூர்யா மூவிஸ்

# தூள்

...taste the thunder...

தரணி

வித்யாசாகர் கோபிநாத்

பரதன் V.T.விஜயன் மணிராஜ் கல்யாண் ராக்கிராஜேஷ்



FOR SANGAM INTERNET BOOKING www.clicktickets.com

# உள்ளே...



















## – தஞ்சை விவசாயிகள் ஆவேசம்!

“ஒரு கல்யாணம், காதுகுத்து, வளைகாப்புன்னா கையில கிடைக்குற இருபது, முப்பதை மொய் எழுதிட்டு வீட்டுக்கு வந்திடுவோம் சாப்பிடுறதுக்கு. அப்படிப்பட்ட நாங்க, இப்ப தட்டை எடுத்துக்கிட்டு போய் சோறு வாங்கி சாப்பிடுறதுக்கு எங்களுக்குக் கொஞ்சம் கூட விருப்பமில்லீங்க!” என்றார் கோட்டூர் கிராமத்து ஜெயம்.

எழுபத்தைந்து வயது முதியவரான ரங்கசாமி சற்றே ஆவேசமாய்ப் பேசுகிறார். “நாலு செவுத்துக்குள்ளார பட்டினிக் கெடந்து செத்தாலும் சாவமே தவிர, தட்டெடுத்துப் போயி ரோட்டுலே நின்னு சோறு வாங்கியாந்து தின்னு, அப்பிடி இந்த உசுரை வளர்க்க மாட்டோம்!”

தமிழக முதல்வர் ஜெயலலிதா அறிவித்து நடைமுறைப்படுத்தப் பட்டிருக்கும் விவசாயிகளுக்கான இலவச மதிய உணவுத்திட்டம் அமுலுக்கு வந்த முதல் நாளான தைப்பொங்கலன்று, அச்சு அசலான விவசாய கிராமம் ஒன்றில் வலம் வந்தோம்.

மன்னார்குடியிலிருந்து பதினைந்து கி.மீ தொலைவில் உள்ளது கோட்டூர் கிராமம். வழக்கமான பொங்கல் குதூகலம், பூரிப்பு ஆகியன, இந்த முறை அந்த கிராமத்து மனிதர்களின் முகங்களிலிருந்து விடை பெற்றுப் போயிருந்தன.

கோட்டூர் கிராமத்தில் இரண்டு இடங்களில் விவசாயிகளுக்கான இலவச மதிய உணவு சமையல் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

இருபது கிலோ அரிசியும், காய்கறி, மளிகை, விறகு செலவுகளுக்காக முப்பத்தைந்து ரூபாயும் அரசு ஒதுக்கித் தந்துள்ளது. (முப்பத்தைந்து ரூபாய் செலவுக்குப் பற்றாமல் மேல் கொண்டு கைப்பணத்தைப் போட்டு செலவை ஈடு கட்டியுள்ளதாக அங்கன்வாடி பணியாளர்கள் கண்ணைக் கசக்கியது தனி சோகம்!)

கோட்டூர் கிராமப் பகுதி விவசாயிகள் அனைவரும் இத் திட்டத்துக்கு எதிர்ப்பு தெரிவித்து புறக்கணிப்புச் செய்திருந்தனர். அதனால் மதியம் மூன்று மணி வரைக்கும் எவரும் இலவச உணவு வாங்கிச் செல்ல வரவில்லை. சமைத்த உணவை என்ன செய்வதென அங்கன்வாடிப் பணியாளர்கள் திகைத்துப் போயிருந்தனர். நாம் கேட்டறிந்த வகையில் சுற்று வட்டாரக் கிராமங்களில் இதே நிலை தானாம்.

# தட்டேந்திப் போக மாட்டோம்!





• தயாராகும் மதிய உணவு

திருவாரூர் மாவட்டத்தில் மட்டும் ஒரு இலட்சத்து எண்பதாயிரம் பேர் இலவச மதிய உணவுக்கு மனுச் செய்திருந்தனர். அவர்களில் அறுபதாயிரம் பேருக்கு மட்டுமே டோக்கன் வழங்கப்பட்டிருந்தது. வியப்பு என்னவெனில் டோக்கன் பெற்றதில் பத்தில் ஒரு பங்கு கூட இலவச மதிய உணவு வாங்க வரவில்லை. "தட்டேந்தி வருவோம்னு யாரும் மனசார மனு செய்யலைங்க. பின்னாடி விவசாயிகளுக்கு நிவாரண உதவி தர்றதா அரசு முடிவெடுக்கும்போது, இப்ப சாப்பாடு டோக்கன் வாங்குனவங்களுக்கு மட்டும்தான்னு அறிவிச்சிட்டா என்ன செய்றதுன்னுதான் எல்லாரும் மனு கொடுத்திருக்காங்க!" என்ற ரகசியம் வெளிப்பட்டது.

மன்னார்குடி சட்டமன்ற உறுப்பினர் வை. சிவ புண்ணியத்தைச் (இந்திய கம்யூ.) சந்தித்தோம். "புயல் வெள்ள சமயங்களில் மீனவர்களுக்கு அரசு மாத உதவிப் பணம் தந்து வருவது போல, இங்குள்ள சிறு விவசாயிகள் மற்றும் விவசாயத் தொழிலாளர்களுக்கு மாதம் முப்பது கிலோ அரிசியும், மாத உதவிப் பணமும் ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு தந்து உதவ தமிழக அரசு முன் வர வேண்டும். மேலும் தஞ்சை, நாகை, திருவாரூர் ஆகிய மாவட்டங்களை வறட்சியினால் பாதித்த மாவட்டங்களாக அரசு உடனடியாக அறிவிக்க வேண்டும். இதன் பின்னரே நமக்கு மத்திய அரசின் நிதியுதவி கிடைக்க வாய்ப்புக் கிட்டும். இவற்றைப் புறந்தள்ளி விட்டு 'தட்டேந்தி வாருங்கள், சோறு போடுகிறோம்!' எனச் செயல்பட முனைந்துள்ள தமிழக அரசின் இலவச மதிய உணவுத் திட்டத்தை விவசாயிகள் யாரும் மனதார ஏற்க மாட்டார்கள்!" என்கிறார் அவர்.

கட்டுரை, படங்கள்:
ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
2 234 5622 / 23 / 24
தொலைநகல் :
044 - 2 234 5621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

Bharathan Publications Private Limited, Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

**க**டந்த பன்னிரண்டாம் தேதி காலை ஆறு மணிக்கெல்லாம் சென்னை அண்ணாசாலையில், கறுப்பு சிவப்புக் கொடிகளின் அணி வகுப்பு! மூங்கில் தட்டிகளில் ஒட்டப்பட்டிருந்த போஸ்டர்கள் பளபளத்தன. தி.மு.க. இளைஞரணி அலுவலகத்தில் ஒரு புதிய கண்ணகி சிலையை 'மாலை ஆறு மணிக்கு தி.மு.க. தலைவர் திறந்து வைக்கிறார்'. அதற்கு முன்பாக, கண்ணகி சிலை அகற்றப்பட்ட சென்னை கடற்கரைச் சாலையில், அதே இடத்தில் உயிருள்ள ஒரு கண்ணகி சிலையைத் திறந்து வைத்தால் எப்படியிருக்கும்?!





• மறுபடியும் எப்போ சிலைய வைச்சாங்க!



• "தேரா மன்னா..."

- எண்ணிக் கொண்டிருக்கும் போதே கையில் ஒற்றைக் காற்சிலம்பும், கண்களில் கனலுமாக வந்து நின்றார் கண்ணகி. வந்த வேகத்திலேயே "எனது சிலை இப்போது எங்கே?" என்று அதட்டலாய்க் கேட்டதில், அடி வயிறு கலங்கிப் போய், "அம்மா தாயே... சென்னை எழும்பூர் அருங்காட்சியகத்தில் அடைபட்டுக் கிடப்பதாக அறி

டுறோம்" என்று செந்தமிழில் செப்பினோம். அவ்வளவு தான், நம்மைக் கேட்காமலேயே அம்பாசிடரில் ஏறி அமர்ந்து கொண்ட கண்ணகி, "ரத்தை அருங்காட்சியகத்திற்கு விடு" என்று உத்தரவு போட்டார். அடுத்த அரை மணி நேரத்தில் அருங்காட்சியகத்திற்குள் பிரவேசித்து, நுழைவுச் சீட்டு வாங்கும் கவுண்டருக்கு விரைந்த கண்ணகி, அங்கேயிருந்த ஊழியரைப் பார்த்து "எங்கேயடா எனது சிலை?!" என்று கொஞ்சம் கோபமாகவே கேட்டார். ஊழியருக்கோ கோபம் எக்குத்தப்பாய் எகிறியது. "யாரும்மா நீ? கொஞ்சம் கூட மரியாதையில்லாமல் வாடா, போடான்னு பேசுறே! உள்ளே போகணும்ன்னா பத்து ரூபா குடு... டிக்கெட் தர்றேன்..." என்றவரிடம் "எனது சிலையை ஒளித்து வைத்தது போதாதென்று டிக்கெட் வேறு கேட்கிறாயா மடையா!" என்று கண்ணகி மறுபடியும் மல்லுக்கட்ட, ஆத்திரமடைந்த ஊழியர் கவுண்டரை மூடி விட்டு வெளியே வந்து கண்ணகியைக் கோபமாகப் பார்த்தார். கண்ணகியோ பதிலுக்கு அக்னிப் பார்வை பார்க்க, டிக்கெட் ஊழியர் சப்த நாடியும் ஒடுங்கிப் போய், உதவிக்கு சக ஊழியர்களை அழைத்தார். யூனிபார்ம் அணிந்திருந்த இரண்டு ஊழியர்கள் வந்து நிலைமையைப் புரிந்து கொண்டனர். "தி.மு.க. பேரணிக்கு வந்த டூப்ளிகேட் கண்ணகி மாதிரி தெரியுது. பிரச்னை பண்ணாதிங்க. இடத்தைக் காலி பண்ணுங்க. இல்லேன்னா போலீசைக் கூப்பிட வேண்டி வரும்" என்று சொன்னதில் கண்ணகி கொஞ்சம் கலங்கி ஜகா வாங்கினார்.

இதற்குள் மியூசியம் பார்க்க வந்திருந்த அம்பத்தூர் சரஸ்வதி வித்யாலயா தொடக்கப் பள்ளி வாண்டுகள் சூழ்ந்து கொண்டனர். தலைவிரி கோலமாகக் கையில் சிலம்போடு இருந்த கண்ணகியைப் பார்த்து "ஆன்ட்டி நீங்க யாரு அம்மன்சாமியா?" என்று கேட்க, தலைமையாசிரியை கவிதாவுக்கு தர்மசங்கடமாகப் போய்விட்டது. அதன்பிறகு பிள்ளைகளை அருங்காட்சியகப் படிக்கட்டுகளில் ஆற அமர உட்கார வைத்து,



• "முறுக்கு சாப்பிடு கண்ணகி"



• கவுண்டரில் கண்ணகி

# கண்ணகி பராக்!

கண்ணகி, கோவலன் கதை சொல்லியும் அவர்களுக்கு கண்ணகியைப் புரிந்து கொள்வது கஷ்டமாகத்தான் இருந்தது.

கேரளத்திலிருந்து குடும்பத்தோடு அருங்காட்சியகத்திற்கு வந்திருந்த சிற்பி ராமபத்ரன் கண்ணகியை எளிதாக அடை

யானம் கண்டு கொண்டார். 'நீதி கேட்கப் புறப்பட்ட கண்ணகி, கறுப்புப் புடைவையல்லவா அணிந்திருந்தாள். நீ ஏன் நீலப் புடைவை அணிந்திருக்கிறாய்!'' என்று சிற்பி கேட்க, "புடைவை நிறம்தானே மாறியது. என் கண்களில் கனல் குறைந்திருக்கிறதா மானுடா?'' என்று கண்ணகி முறைத்ததில், கேரள சிற்பி எஸ்கேப் ஆனார்.

அருங்காட்சியகத்தில் தனக்கு நீதி கிடைக்காத கோபத்திலிருந்த கண்ணகி, மெரீனாவில் தனது சிலையிருந்த இடம் நோக்கி ரதத்தைச் செலுத்தச் சொன்னதால், அடுத்த ஐந்தாவது நிமிடம் அங்கே அம்பாசிடர் போய் நின்றது. சிலை இருந்த இடம் சாலையாக மாறிவிட்டிருந்தது. அந்த இடத்திற்குப் பாதுகாப்பாக ஐந்தாறு போக்குவரத்துக் காவலர்கள் அங்கே பணியில் இருந்தார்கள். அவர்களை மீறி எப்படி சிலையிருந்த இடத்தில் கண்ணகியை நிற்க வைப்பது, என்று நாம் விழித்துக் கொண்டிருக்க, கண்ணகியோ விடுவிடுவென்று நடந்து போய், சிலையிருந்த இடத்தில் கையில் சிலம்போடு நீதி கேட்கும் தோரணையில் நின்று விட்டார். வந்திருப்பது கண்ணகிதான் என்று புரிந்து கொண்ட போலீசார், போக்குவரத்துக்கு இடைஞ்சல் என்றோ, பொது இடத்தில் அமைதியைக் குலைக்கிறீர்கள் என்றோ சொல்லி, கண்ணகியை அங்கிருந்து அப்புறப் படுத்துவார்கள் என்று பார்த்தால், துரும்பைக் கூட அசைக்கவில்லை. மாறாக மோட்டார் சைக்கிளில் அங்கே வந்த போக்குவரத்து ஆய் வாளரிடம் விஷயத்தைச் சொல்ல, அவரோ, 'இங்கிருந்து நீங்கள் எஸ்கேப் ஆயிருங்க. இல்லேன்னா உங்களையும் போட்டோ பிடிச்சிப் போட்டுடுவாங்க' என்று அட்வைஸ் பண்ணியதில், அங்கே காவலுக்கு இருந்த அத்தனை பேரும் நொடிக்குள் மறைந்து போனார்கள்!


• அம்மன் சாமியா!

இதற்கிடையில் சிலையிருந்த இடத்தில் வெறும் தரையில் கண்ணகி நிற்பதைக் கண்டு பொறுக்க முடியாத கடலை வியாபாரி முருகேசன், தமது தள்ளு வண்டியில் இருந்த கள்ளிப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு ஓடி வந்தார். "அம்மா தாயே. இது மேலே ஏறி நில்லு... இதுதான் இப்போதைக்குப் பீடம்.. யாரு என்ன சொல்றாங் கன்னு பார்த்துப் புடுறேன்'' என்று உற்சாகப்படுத்தி விட்டுப் போனார். 'அடடா


• "நீதி கிடைக்குமா?"

இப்படியொரு பாசமிகு தமிழனா? என்று கொஞ்சம் கண்களில் கருணை காட்டிய கண்ணகி, தமது பாதம் தப்பித்த சந்தோஷத்தோடு, கள்ளிப் பெட்டி பீடத்தில்

ஏறி நின்று கொண்டார். மெள்ள கூட்டம் கூட ஆரம்பித்தது. அந்தச் சந்திப்பில் நின்று செல்லும் பேருந்துகள், இரண்டு சக்கர வாகனங்களில் பயணம் செய்வோர், "ஏய் கண்ணகியைப் பாருங்கப்பா!" என்று ஆச்சர்யமாகக் கூவினார்கள். கடற்கரைக்கு விசிட் வந்த கூட்டத்தில் பலரும் கண்ணகியைச் சூழ்ந்து கொண்டனர். சென்னை துறைமுகப் பொறுப்புக் கழகத்தில் வேலை செய்யும் சுந்தர்



* அம்மா தாயே தர்ம பத்தினி...

ராஜன். "என்ன சார், மறுபடியும் இதே இடத்தில் சிலை வைக்கணும்னு போராட்டமா?" என்றார். ஆனால் கண்ணகி பதில் எதுவும் சொல்லவில்லை.

திடீரென்று கூட்டத்தை விலக்கிக் கொண்டு உள்ளே புகுந்த ஒரு மூதாட்டி. "அம்மா தாயே தர்ம பத்தினி, மறுபடியும் வந்துட்டியா ராசாத்தி" என்று கண்ணகியின் காலைத் தொட்டு வணங்கினார். திருவல்லிக்கேணி குடிசைப் பகுதியில் வசிக்கும் அந்த மூதாட்டியின் பெயர் செங்கேணி. "இங்கேயிருந்த கண்ணகி சிலை நிழலில்தான் தூங்குவேன். அது காலடியிலேதான் கிழங்கு வியாபாரம் பண்ணுவேன். சிலை என்னைக்கிப் போச்சோ, அன்னைக்கே என் வியாபாரமும் போச்சு" என்று கலங்கவே ஆரம்பித்துவிட்டார். கண்ணகியைச் சூழ்ந்து வேடிக்கை



* சீற்றத்துடன் சிலம்பரசி

பார்த்துக் கொண்டிருந்த கூட்டத்தைப் பயன்படுத்தி, பரபரப்பாக முறுக்கு வியாபாரம் செய்து கொண்டிருந்த பழனி, "கண்ணகித் தம்பி, ரெண்டு முறுக்கு சாப்பிடுங்க. ரொம்ப நல்லாயிருக்கும். காசெல்லாம் தர வேண்டாம்" என்று கண்ணகிக்குள் ஒளிந்திருப்பது ஓர் ஆண்தான் என்று கண்டுபிடித்துவிட்டார். ஆனால் கண்ணகி முறுக்கை வாங்கிக் கொள்ளாமல் முறுக்கு பண்ணிக் கொண்டார்!

எப்படியும் கண்ணகியை ஒருமுறையாவது சிரிக்க வைத்து விடுவது என்ற நோக்கத்தோடு... ஒவ்வொரு முறையும் 'ஸ்மைல் ப்ளீஸ்' சொல்லிக் கொண்டிருந்த நமது புகைப் படக் கலைஞருக்குக் கடைசிவரை ஏமாற்றம்தான்!

- ஜெஸ்

படங்கள் : ஸ்ரீஹரி

மாடல் : கணேஷ்பாபு

# அன்பே சிவம்

(U)

தமிழ் சினிமா, கூட்டுப் புழு பருவம் தாண்டி, வண்ணத்துப் பூச்சிப் பருவத்துக்கு வந்து விட்டது என்பதை அறிவிக்க வந்துள்ள படம்.

புதுச்சாயலுடன் விஷுவல் ட்ரீட் தந்தே தீருவது என்று கங்கணம் கட்டிக் கொண்டு, தீவிரமாக உழைத்திருக்கிறது சுந்தர் சி. கூட்டணி!

புவனேஸ்வரிலிருந்து சென்னைக்கு அவசரமாகப் புறப்படும் கல்யாண மாப்பிள்ளை மாதவனுக்குத்தான் எத்தனை கடுப்பான அவஸ்தைகள்... அடுக்கடுக்கான இம்சைகள்! எல்லாவற்றிலிருந்தும் அன்போடு காப்பாற்றி உதவுகிறார் கமல், அவர் கல்யாணம் செய்யவிருப்பது தான் காதலித்த கிரணைத்தான் என்று அறியாமல்!

கதாநாயகன் கமல்தான் என்றாலும் மாதவன் லவ்லி! கமலின் குறட்டையின் சவுண்டு எஃபெக்டுக்கு ஏற்ப, கச்சிதமாய் மாறும் மாதவனின் முகபாவங்களும் அவஸ்தை தோற்றங்களும்... தியேட்டரே சிரிப்பலையில் தளும்புகிறது!

கமலுக்கு 'டெய்லர்மேட்' ரோல்! கனகச்சிதமாகப் பொருந்துகிறது. காதலில் குழையணுமா? கோபத்தில் சிவக்கணுமா? பாசத்தில் உருகணுமா? அசத்துகிறார் மனிதர், தாடை நரம்பு இழுக்க இழுக்க அவர் பேசுவதை காமெரா கூர்மையாய் சுருட்டிக் கொண்டிருக்கிறது.

"உங்க சாமி கொடுத்த வரத்தை நான் கொடுத்ததா நினைச்சுக்க" என்று நாசரிடம் குரல் கம்ம விடைபெறும் காட்சியில் கமல் பிராண்ட் நடிப்பு!

புத்தாண்டில் அறிவித்தே ஆக வேண்டிய விஷயம், கிரண் நடித்திருக்கிறார். குறிப்பாக, சினிமா ஆபரேட்டர் அறையில், கமலை அணைத்துக் கொண்டு கலங்கும் காட்சியில், கண்களே பாதி விஷயம் பேசி விடுகின்றன. கிரண், இனி டு பீஸ் ஆடைகளுக்கு விடை கொடுத்து விட்டு நடிப்பைக் கவனிக்கலாம்.

காமிரா கூடுதல் அழகு என்றால் வசனங்கள் படு இயல்பு. சிவப்புச் சிந்தனையோ, சிறு நகைச்சுவையோ பளிச்சிடுகின்ற 'ஹாய்' மதன் வசனங்கள்.

'கடவுள்' பற்றிய நீண்ட வசனங்கள் விசிலடிச்சான் ரசிகர்களுக்கு அலுப்பூட்டும். அதே போல அந்த வீதியோர நாடகத்தின் நீளமும் அதிகம்!

கமல் இறந்து விட்டதாக நாசர் சொன்னதுமே கிரண் அதை நம்புவதும், சந்தானபாரதி திடீரென போதி மரத்தடியில் ஞானம் பெற்று நல்லவராவதும் நம்ப முடியவில்லை.

தாதா - போலீஸ், டீனேஜ் லவ் என்று ஒரே மாதிரியான படங்களைப் பார்த்து கடாமுடாவாகிப் போன அஜீரணத்துக்கு ஈனோசால்ட் அன்பே சிவம்!

- அனு

● அபவ் ஆவரேஜ்

# நடக்குமென்பார்; நடக்கும்...!

**மேஷம்** : நியூஸிலாந்து ஒரு நாள் போட்டியில் இந்திய அணி பட்ட பாடு மாதிரி உங்கள் எதிரிகள் ஓடிப் போயிடுவாங்க. எந்தக் காரியத்தையும் தலைகீழா நின்னாவது முடிச்சிடுவீங்க. மனசுல தன்னம்பிக்கை, துணிச்சல் கம்பீரமா நிற்கும். அலுவலகத்தில் புகழ், பாராட்டு கிடைக்கும். புதிய முயற்சிகள் வெற்றி தரும். இதுவரை தாமதமான பதவி உயர்வு இப்ப வந்து சேர வாய்ப்பிருக்கு. குடும்பத்துல மகிழ்ச்சிக்குக் குறையில்லை. பெண்களுக்கு இது ஜாலி வாரம். கடன் தொல்லை நீங்கி மனசுல தெம்பு வரும். வராமல் இழுத்தடிச்சுட்டிருந்த பணம் இப்ப வந்து சேரும்.

**ரிஷபம்** : நியூஸிலாந்து தொடரில் இரண்டு செஞ்சுரி அடித்து பேட்டிங் திறமையை நிரூபித்த சேவாக் மாதிரி, உங்க மனசெல்லாம் உற்சாகம் கரைபுரள போகுது. நீங்களே இன்ப அதிர்ச்சிக்கு ஆளாகுற மாதிரி ஒரு திருப்பம் வரப் போகுது. புதிய முயற்சியைக் கைவிட்டுட வேண்டாம். பண வசதி தாராளமா இருக்கும். சொத்து சம்பந்தமான பிரச்னையில இருந்த சிக்கல் இப்ப தீரும். சிலர் புது வீடு வாங்க, கட்ட வாய்ப்பிருக்கு.

**மிதுனம்** : நியூஸி. ஒரு நாள் போட்டியில் சச்சின் எடுத்த 0, 1, 1 ரன்கள் மாதிரி, சின்ன சின்னப் பிரச்னைகள் வந்து தொந்தரவு பண்ணலாம். இதுக்காக ரொம்ப பயப்படத் தேவையில்லை. நெருங்கிய நண்பர்கள் உறவினர்கள் உதவ முன் வருவாங்க. வேலை விஷயமா சிலர் வெளிநாடு போகலாம். பழைய கடன் தொல்லை நீங்கும். குடும்பத்துல சுபமங்கள காரிய நிகழ்ச்சிகள் நடக்க வாய்ப்பிருக்கு. கல்யாணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பிருக்கு, கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு பெயர், புகழ் அதிகரிக்கும்.

**கடகம்** : ஷேன் பாண்ட், ஆதம்ஸ் பந்தில் சுருண்ட இந்திய கிரிக்கெட் வீரர்கள் மாதிரி, உங்களை டென்ஷன் ஆக்கிட்டிருந்த பிரச்னைகள் சுருண்டிடும். தேவைக்கேற்றபடி பணம் வரும். அலுவலகப் பணியாளர்கள் சிலருக்குப் பதவி உயர்வு, பாராட்டு கிடைக்க வாய்ப்பிருக்கு. புதிய வேலை முயற்சிகளில் வெற்றி உண்டு. அரசியல்வாதிகளுக்கு திடீர் அதிர்ஷ்டம் அடிக்க வாய்ப்பிருக்கு. (மந்திரி பதவி?) பெண்கள் தாங்கள் நினைச்சதை முடிக்க வாய்ப்பிருக்கு.

**சிம்மம்** : ஜாகிர்கானும், ஸ்ரீநாத்தும் நியூஸி. பேட்ஸ்மேன்களை ஓரளவு திணறடித்த மாதிரி, சங்கடமான சூழ்நிலையிலும் திறமையுடன் எதையும் நீங்க சமாளிப்பீங்க. பதவி உயர்வு, புதிய பொறுப்பு, கூடுதல் அதிகாரம் ஆகியவை சிலருக்கு ஏற்படலாம். தனியார் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்க ஏதாவது சாதனைப் படைக்க வாய்ப்பிருக்கு. எதிர்பார்த்த நல்ல தகவல் இப்போ வந்து சந்தோஷப் படுத்தப் போகுது.



**கன்னி** : இந்த வாரம் தெய்வீக ஈடுபாடு அதிகரிக்கும். எந்தவிதமான எதிர்ப்பையும் வெல்லக் கூடிய சக்தி பிறக்கும். எதையும் திறமையா செயல்படுத்தி வெற்றி காண்பீங்க. மனசுல துணிச்சலும் தன்னம்பிக்கையும் அதிகரிக்கும். புதிய முயற்சிகள் அனுகூலம் தரும். சிலருக்குப் புதிய பொறுப்புகள் வந்து சேரலாம். கொடுக்கல் வாங்கல் சுமுகமா இருக்கும். பார்ட்னர்ஷிப்ல தொழில் பண்றவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. கல்யாணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு தேடி வரப் போகுது.

**துலாம்** : நியூஸி. கேப்டன் பிளமிங் இந்திய பந்து வீச்சை விளாசி வெற்றிக்

அக்னிசர்மா பக்கம்

ஜனவரி 22 முதல் 28 வரை

கொடி நாட்டிய மாதிரி, உங்களுக்கு வரும் தடைகள், குறுக்கீடுகளை சாமர்த்தியமா சமாளிப்பீங்க, வாழ்க்கையில் அதிர்ஷ்டகரமான திருப்பம் ஏற்படப் போகுது. இதுவரை இருந்து வந்த எதிர்ப்புகள் மாயமாகும். தாமதமாகி வந்த பதவி உயர்வு வந்து சேரும். பார்ட்னஸ்ஷிப்ல தொழில் பண்றவங்களுக்கு எதிர்பாராத முன்னேற்றம் உண்டு. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் பெயர், புகழ் கிடைக்கும். குடும்பத்தில் சின்ன சின்னப் பிரச்னைகள் வந்து இம்சை பண்ணும். பெண்களுக்கு இது அதிர்ஷ்டமான வாரம்.

**விருச்சிகம்** : மிட் ஆனில் நின்று கொண்டு இந்திய அணியைக் கரையேற்ற அரும்பாடுபட்ட யுவராஜ் சிங் மாதிரி, எதிர்ப்புகளைச் சமாளிப்பீங்க. இந்த வாரம் எல்லாக் காரியத்திலும் உங்களுக்கு வெற்றி உண்டு. வெளிநாடு போக முயற்சி பண்றவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு இருக்கு. புதிய வேலை முயற்சிகளில் இருப்பவங்களுக்கு வெற்றி உண்டு. புது வீடு கட்ட, வாங்க, வாய்ப்பிருக்கு. பெண்களுக்கு இது உற்சாகமான வாரம்.

**மீன ராசிக்காரரான ஜெயா டி.என். சேஷனுக்கு பண வசதி தாராளமாம்!**

**தனுசு** : நியூஸி. தொடரில் ஒழுங்கா ஆடலைன்னாலும் லட்ச லட்சமா பணம் மட்டும் குறைக்காம வாங்குன இந்திய வீரர்கள் மாதிரி, தேவைக்கேற்ப உங்களைத் தேடி பணம் வந்து சேரும். புதிய முயற்சிகள் அனுகூலமாகும். வரவேண்டிய பணம் வசூலாகும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு மாமூல் பலன் தடைபடாது. சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு பெயர், புகழ் கூடும். குடும்பத்தில் அன்பு, பாசம் அதிகரிக்கும். பிரிந்தவர்கள் குடும்பத்தில் ஒன்று சேருவார்கள்.

**மகரம்** : எந்த வகையான சிக்கல் இருந்தாலும் திறமையுடன் செயல்பட்டு வெற்றி காண்பீங்க. அலுவலகத்தில் உயரதிகாரிகள் பாராட்டு கிடைக்கும். எதிர்ப்புகள் மறையும், சிலருக்குப் பதவி உயர்வு, இடமாற்றம் கிடைக்க வாய்ப்பிருக்கு. வசூலாக வேண்டிய தொகை வந்து சேரும். கடன் தொல்லை நீங்கி, மனசுல சந்தோஷம் பிறக்கும். குடும்பத்துல ஒற்றுமை, மகிழ்ச்சி நிறைந்திருக்கும். பண நடமாட்டம் தாராளமா இருக்கும். குடும்பத்தில் சுபகாரியங்கள் நடக்க வாய்ப்பிருக்கு.

**கும்பம்** : இந்த வாரம் எதிர் பாராத பொருள் வரவு, அல்லது திடீர் அதிர்ஷ்டம் அடிக்கப் போகுது. இதனால மனசுல உற்சாகம் கரைபுரளும். எதிரிகள் அடங்கிப் போவாங்க. எந்தவிதமான சிக்கலான காரியத்தையும் திறமையுடன் செயல்பட்டு முடிப்பீங்க. சிலருக்குப் பதவி உயர்வு கிடைக்கும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. குடும்பத்தில் சுப மங்கள முயற்சிகள் வெற்றி பெறும். உறவினர்கள், நண்பர்கள் வருகைன்னு வீடு கலகலன்னு இருக்கும். எதிர்பார்த்த நல்ல செய்தி வந்து மனத்தில் சந்தோஷம் தெளிக்கும்.

**மீனம்** : மனசுல உற்சாகமும் தன்னம்பிக்கையும் பிறக்கும், பண வசதி தாராளமா இருக்கும். எதிரிகள் அடங்கிப் போவாங்க. அலுவலகத்தில் எதிர்ப்புகள் அடங்கும். மதிப்பு, அந்தஸ்து உயரப் போகுது. உயரதிகாரிகள் பாராட்டு கிடைக்கற மாதிரி ஏதாவது செய்வீங்க. வரவேண்டிய பாக்கித் தொகை இப்ப வந்து சேரும். தொழில் காரணமா வெளியூர் / வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. அரசியல்வாதிகளின் அந்தஸ்து செல்வாக்கு உயரும். குடும்பத்தில் எல்லா வகையிலும் முன்னேற்றம் உண்டு.

# நடக்குமென்பார்; நடக்கும்...!

# நாளைய நட்சத்திரம்



பெயர் : **நீனா ஆர். மேத்தா**

வயது : ஸ்வீட் செவன்டீன்

ஊர் : தருமமிகு (?) சென்னை

பொழுதுபோக்கு : டான்ஸ், பாட்டு போக நேரமிருந்தா துப்பறியும் கதைகள்.

இலட்சியம் : 'இந்தியாவின் பத்மாலட்சுமி' ஆகணும் (ருஷ்டிகள் உஷார்!)

தகவல் : **விபா**

வாஜ்பாய் பிராண்ட் ஹிந்துத்வா

தொகாடியா பிராண்ட் ஹிந்துத்வா

பாதிரியார் மீது தாக்குதல்

ஆர்.எஸ்.எஸ் பிராண்ட் ஹிந்துத்வா

## புதிய நிர்வாக நகரம்:

## வயிற்றில் அடிக்கும் குரூரம்!

மலேஷிய அமைச்சர் மெரீனாவைக் குத்தகைக்கு எடுக்க திட்டம் தயாரித்து வருகிறார்; தமிழக தலைமைச் செயலகத்தைப் பழைய மகாபலிபுரம் சாலைக்கு இடம் பெயர்த்துச் சீரமைக்க இன்னொரு திட்டம் மலேஷிய அரசால் வரையப்பட்டு வருகிறது. இவ்விரண்டு திட்டங்களையும் மூன்று மாதங்களில் தயாரித்தளிப்பதாக ஒப்பந்தப் பத்திரம் கையெழுத்தாகியுள்ளது.

மெரீனா திட்டத்துக்கு ஆயிரம் கோடி ரூபாய் செலவாகும். இதில் தமிழக அரசுக்கு முதலீடு எதும் இராது என்கிறார் முதல்வர். அப்படியெனில், மலேஷிய அரசு மெரீனாவையோ அதன் பெரும் பகுதியையோ குத்தகைக்கு எடுத்து, அழகுபடுத்தி அலுவலக வளாகம் அமைத்து, அவற்றை வாடகைக்கு விட்டு, லாபம் காணும் என்று எதிர் பார்க்கலாம். கடற்காற்று வாங்க மெரீனாவுக்குள் நுழைவதற்கேகூட கட்டணம் வசூலிக்கப்படலாம்! இந்தத் திட்டம் குறித்து விவரங்கள் தெளிவாக இல்லை என்பதால், இது தமிழகத்துக்குச் சாதகமாக அமையுமா என்று முடிவு செய்வது தற்போது இயலாது. ஆனால் ஒரு விஷயம் மட்டும் தெளிவாகத் தெரிகிறது. 'அழகு படுத்தப்படவுள்ள' கடற்கரைப் பகுதியில் இருக்கும் மீனவ குடியிருப்புகளில் வாழும் மக்கள்




கல்கி



2003 ஜனவரி 26

சித்ரபானு தை 12

மலர் : 61

இதழ் : 26




ஒரு புதிய குடியிருப்புக்கு இடம்பெயர வேண்டி வரும். இந்த மீனவர்களுக்கு மெரீனா கடற்கரைப் பகுதியின் அண்மையையும் உபயோகத்தையும் மறுப்பது சுலபமான காரியமில்லை. மெரீனா பகுதியை அழகு படுத்துவது என்பது இம்மக்களை வெளியேற்றித் துன்பப்படுத்தாமல் சாத்தியமாகப் போவதுமில்லை.

இன்று மெரீனா கடற்கரைப் பகுதிதான் சென்னை மக்களுக்கு மிகப் பெரிய திறந்தவெளி கழிப்பறை என்பது மறுக்க முடியாத உண்மை. இதற்குக் காரணம், அடிப்படை சுகாதார வசதிகள் போதுமான அளவு இல்லை என்பது மட்டும் அல்ல; இருக்கிற வசதிகளைப் பயன்படுத்தும் அறிவும் சுகாதார உணர்வும் நம் மக்களுக்கு இல்லை. அவ்வுணர்வை ஊட்டவும் கல்விக் கண்களைத் திறக்கவும் ஆயிரம் கோடி என்ன, இரண்டாயிரம் கோடியில் திட்டம் போட்டாலும் உடனே எழுந்து நின்று வரவேற்கலாம். ஆனால், அழகு படுத்தும் திட்டத்துக்கு ஆயிரம்கோடி என்பது அச்சமூட்டு கிறது. அதிலும் அது முழுக்கவே மலேஷிய அரசின் முதலீடாக அமையும் என்னும்போது, எழக்கூடிய சிக்கல்கள் மிரட்டுகின்றன.

தலைமைச் செயலகத்தை இடம் பெயர்ப்பதும் மிக ஆடம்பரத் திட்டமே! ஐயாயிரம் ஏக்கர் பரப்பில் புதிய நிர்வாக நகரம் உருவாவதற்குப் பதினைந்து ஆண்டுகள் ஆகுமாம். அதற்குள் திட்டச் செலவு எத்தனை மடங்கு உயருமோ, எத்தனை அரசுகள் மாறுமோ, தெரியாது!

தமிழகம் இன்று இருக்கிற இருப்பில் இந்தத் திட்டம் ஒரு குரூரமான ஜோக் போல்தான் தோன்றுகிறது. ஆட்சியாளர்களும் அதிகாரிகளும் ஆடம்பரங்களைக் குறைத்துக் கொண்டு, எளிமையைக் கடைப்பிடிக்கும் முன் மாதிரிகளாகத் திகழ வேண்டியது மிகவும் அவசியம். திருவடந்தை – தையூர் நிர்வாக நகரம் அந்த எளிமைக்குச் சான்றாக நிச்சயம் அமையப் போவதில்லை.

தற்போது தலைமைச் செயலகம் இயங்கி வரும் கோட்டை வளாகத்தில் இடம் போதவில்லை என்றும், அது ராணுவக் கட்டுப்பாட்டில் இருக்கிறது என்றும், ஆட்சேபணை தெரிவித்திருக்கிறார் முதல்வர். இத்தனை ஆண்டுகளாகப் பிரச்னைகளாகவோ ஆட்சேபணைகளாகவோ இவை




யாருக்கும் தோன்றவில்லை.

தமிழ்நாட்டுப் பாரம்பர்ய கட்டடக் கலைப் பாணியில் நிர்வாக நகரம் அமைக்கப்படும் என்பது ஆறுதலாக இருந்தாலும், இந்தத் திட்டத்தில் போடப்படும் பணம் மொத்தமும் செலவுதான்; முதலீடு இல்லை என்பது வயிற்றைக் கலக்க வைக்கிற உண்மை.

விவசாயிகள் பிரச்னை, நெசவாளர்கள் பிரச்னை, பட்டினிச் சாவு, போனஸ் இல்லை, அரசுப் பணியில் ஆள் குறைப்பு என்றெல்லாம் ஒரு பக்கம் அவலப்பாட்டு கேட்கிறது. விலைவாசி உயர்வு, புதிய வரிகள், கூடுதல் வரிகள் என்று இன்னொரு பக்கம் நடுத்தர வர்க்கத்தைப் பிழிந்தெடுக்கும் அரசின் பொருளாதாரக் கொள்கைகள்.

இந்நிலையில் தமிழக அரசு மலேஷிய அரசுடன் செய்து கொள்ளவிருக்கும் திட்ட ஒப்பந்தங்களை வரவேற்க இயலவில்லை. தொழில் துறையில் முதலீடு அல்லது தொழில் துறை முன்னேற்றத்துக்கு உதவக் கூடிய அடிப்படை வசதிகளில் முதலீடு எனில் மகிழலாம்; இவை பிற்காலத்தில் நல்ல வருவாயைப் பெற்றுத் தரும்.

குடிநீர்ப் பற்றாக்குறையைத் தீர்க்க தமிழக அரசு என்ன செய்யப் போகிறது?

பாலைவனத்தையே சோலைவனமாக்கக்கூடிய புதுப்புது விவசாய யுக்திகளைக் கையாண்டு வெற்றி கண்டிருக்கிறது இஸ்ரேல். தமிழகத்திலோ, முப்போகம் விளைந்த காவிரிப் படுகையில் பட்டினிச் சாவுகள் நிகழ்கின்றன. விவசாயிகளின் அறிவைப் பெருக்கி, புதிய சாகுபடி முறைகளை அறிமுகப்படுத்த அரசு என்ன முயற்சி எடுத்தது?....

வாக்காளர்கள் இதைப் பற்றியெல்லாம் யோசிக்காமல் இருக்கக் கூடும். மெரீனாவை அழகு படுத்தும் திட்டமும் தலைமைச் செயலகத்தை இடம் பெயர்க்கும் திட்டமும் அவர்களை பிரமிப்பில் ஆழ்த்திவிடக் கூடும். ஆனால், யோசிக்க வேண்டிய ஆட்சியாளர்கள் சிந்திக்காமல் இருக்கலாமா? மக்களைப் பிழிந்தெடுத்துப் பெறும் வரிப்பணத்தை வெறும் பகட்டுக்குப் பயன்படுத்துதல் தகுமா...? ○



தொகுப்பு)

3. **எழுத்துலகில் அமர தாரா** (அமரர் கல்கி பற்றி பல்வேறு அறிஞர்கள் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பு)

**இரு ஆண்டுகளுக்கு சந்தா ரூ.660/-**

செலுத்துவோருக்கு **'கல்கி களஞ்சியம்'** பரிசாக வழங்கப்படும். (அமரர் கல்கி எழுதிய சிறுகதைகள், குறுநாவல்கள், விமர்சனங்கள், கட்டுரைகள் முதலியவற்றிலிருந்து மிகச் சிறந்தனவற்றின் தொகுப்பு. கல்கி கிருஷ்ணமூர்த்தி நூற்றாண்டு வெளியீடு. பரிசுப் புத்தகத்தின் மதிப்பு ரூ.150/-

**மூன்றாண்டுச் சந்தா ரூ.990/-**

செலுத்துவோருக்கு **அமரர் கல்கி** எழுதிய **சிவகாமியின் சபதம்** அல்லது **அலை ஓசை** நாவல் பரிசு. புத்தகத்தின் மதிப்பு ரூ.200/- முதல் ரூ.250/-வரை.

**இந்தச் சிறப்புச் சலுகை 07.02.03 தேதி வரை மட்டுமே.** எனவே முந்துங்கள்! உடனே சந்தா அனுப்பி பரிசு பெறுங்கள்! உங்கள் விலாசத்தைத் தெளிவாகக் குறிப்பிடுங்கள்.

# கல்கி

# சந்தா கட்டுங்க! பரிசு தட்டுங்க!

**அமரர் கல்கி எழுதிய நூல்!**

கல்கி பத்திரிகை வாரம் தோறும் உங்கள் வீடு தேடி வர சந்தா செலுத்துங்கள்; பரிசும் பெற்று மகிழுங்கள்.

**ஓராண்டுச் சந்தா ரூ.330/-**

செலுத்துவோருக்கு பின்வரும் மூன்று புத்தகங்களில் ஏதேனும் ஒன்று பரிசு. நீங்களே தேர்வு செய்யலாம். பரிசுப் புத்தகத்தின் மதிப்பு ரூ.65 முதல் ரூ.75/- வரை.

1. **தியாகபூமி** (நாவல்)

2. **மனிதன் எப்படி உயர்கிறான்?** (கல்கி எழுதிய சினிமா, நாடக விமர்சனங்களின் தொகுப்பு)

ஏற்கெனவே சந்தாதாரராக உள்ளவரும் தங்கள் சந்தா எண்ணைத் தெரிவித்து தொகை அனுப்பலாம். உங்கள் சந்தா, முடிவு தேதியிலிருந்து புதுப்பிக்கப்படும். **கல்கி** என்ற பெயருக்கு உள்ளூர் செக்*, மணி ஆர்டர் அல்லது டிமாண்ட் டிராஃப்ட் அனுப்ப வேண்டிய முகவரி :

சர்க்குலேஷன் மானேஜர்,
கல்கி,
47-என்.பி., ஜவஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97.

*(வெளியூர் காசோலைகள் (Cheques) ஏற்க இயலாது.)

**கல்கி சந்தாதாரருக்கு புத்தாண்டு - பொங்கல் பரிசு!**

மீனா சுந்தர்

நீ வசிக்கும் தெருவில்
நான் போகும் போதெல்லாம்
யாரோ என் பெயர் சொல்லிக்
கூப்பிடுவது போலவே கேட்கிறது...
நீ கூப்பிட்டாயா?
கூப்பிடவில்லை என்று மட்டும் சொல்லி
விடாதே!

நிச்சயம் கூப்பிட்டிருப்பாய்
என் காதில் விழக்கூடாது என்பதிலும்
விழாது என்ற நிச்சயத்திலும்
பூவோடு பேசுவது போல்
மிக மெல்லியதாய் என்னைக் கூப்பிட்டிருப்பாய்.
என் காதுக்குக் கேட்டதே உன் குரல்
நான் திரும்பிப் பார்த்திருப்பேன்
ஆனால் பார்க்கவில்லை; ஏன் தெரியுமா?
பார்த்திருந்தால் மேலும் நீ பேசுவதை
நிறுத்தியிருப்பாய் அல்லவா?
ஆனாலும் மேலும் நீ எதுவும் பேசவில்லை.
என்னிடம் பேச ஒன்றுமே இல்லையா
உன்னிடம்?

என் பெயர் மட்டும்தான் தெரியுமா, உனக்கு?
என் பெயர் சொல்லி
என்னை எவராவது கூப்பிட்டால் கூட
உன் நினைவுதான் வருகிறது.
என் பெயர் என்பது
நீ கூப்பிடுவதற்கு மட்டும்தானா?



# நானும் என் பெயரும்



தேவ மருந்து

# 25



பெரிய

ஆஞ்சைனா பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தபோது 'தொடரும்' விழுந்து விட்டது. இருதயம் பற்றிச் சொல்லி முடித்துவிட்டு தலைக்குப் போவோம்!

இருதய நோயைப் பற்றி சரகர் சொல்லும்போது 'இருதயத்தில் கல்லைத் தூக்கி வைத்தது போல் ஒரு வலி வரும்' என்று கூறுகிறார். இது ஆஞ்சைனாவாகத்தான் இருந்திருக்க வேண்டும். இப்படி இருதயத்தைப் பற்றி நிறைய விஷயங்கள், 'தமனி பிரதிச்சயோ தமனி உபலேபஹா' 'இரத்த நாளங்களில் கொழுப்பு அடைக்கும்', போன்ற விஷயங்களெல்லாம் புத்தகத்தில் சொல்லப்பட்டுள்ளது என்பது மஹா ஆச்சரியமான விஷயம்.

இருதய பாதிப்பு வராமல் இருப்பதற்கு, நார்ச்சத்து நிறைந்த காய்கறி வகைகளை உண்ண வேண்டும். கொழுப்பு உள்ள உணவுகள், தேங்காய் எண்ணெய், நெய் போன்றவற்றைப் பயன்படுத்தக் கூடாது. தினமும் உடற்பயிற்சி செய்ய வேண்டும். தேங்காய் எண்ணெய், நெய் பற்றிச் சொல்லும்போது, ஆயுர்வேதத்தில் மருந்துகள் நெய்யில் தயாரிக்கப்படுகிறதே, இதனால் ஆயுர்வேத மருந்துகளெல்லாம் கொழுப்பானதா என்று கேட்பார்கள். சில நோயாளிகள், நான் லேகியம் எழுதும்போது கூட, நெய் சேர்ந்துள்ளதா என்று கேட்பார்கள். நெய் என்பது கபத்தைக் கூட்டும். அளவுக்கு அதிகமானால், கொழுப்பை உண்டாக்கும் என்பது உண்மையே. ஆனால், அக்னி பலம் ஒருவனுக்கு இருக்கும்போது, நாம் ஆராய்ந்து கொடுத்தோமானால் அது கெடுதலைச் செய்யாது. ஆயுர்வேதத்தில் கூட நல்லெண்ணெய்க்குத்தான் அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. இருதய நோய்களுக்கு நல்லெண்ணெய் சிறந்தது.

கொழுப்பை நீக்குவதற்குச் சிறந்த மருந்து குக்குலு என்று கூறலாம். குக்குலு என்பது ஒருவகை மரத்தினுடைய பிசின். அர்ஜுனா (மருதம்பட்டை), இது மட்டுமில்லாமல் புளி வஞ்சி, இலந்தை, புளி, மாதுளை, துரிஞ்சிக்காய் இதெல்லாமே ஹ்ருத்யம் என்ற குணத்தை அளிக்கக்கூடியன. ஹ்ருதயம் என்றால் இருதயத்திற்கு நல்லது என்று அர்த்தம். இதெல்லாம் கொழுப்புச் சத்தை நீக்குவதற்கு. கோரைக்கிழங்கு, கோஷ்டம், மஞ்சள், மரமஞ்சள், அதிவிடயம், கடுகு ரோஹிணி, கொடுவேலி, புங்கு, வசம்பு போன்றவை, இருதயத்தின் கொழுப்புச் சத்தைத் தீர்க்கக் கூடியன.

அர்ஜுனாரிஷ்டம் என்று சொல்லக் கூடிய மிகப் பிரசித்தி வாய்ந்த அரிஷ்டத்தைக் (அரிஷ்டம் என்று சொன்னால் மருந்துகளைக் கஷாயமாகக் காய்ச்சி பூமிக்கடியில் வைத்து புளிக்கச் செய்து கிடைக்கும் ஒரு மருந்து) கொடுத்து, இருதய நோய்கள் நல்ல ரீதியில் குணமடைவதை நாம் பார்த்திருக்கிறோம். டிஜிட்டாலிஸ் என்று சொல்லக்கூடிய மருந்தும் மூலிகைதான்.

இருதயத்திற்கு ஏற்ற மருந்துகளில் மிக முக்கியமானது ஓரிலை வேர். ஓரிலை வேர்க் கஷாயம் இருதயத்திற்கு ஆயுர்வேதக் கண்ணோட்டத்தில் மிக முக்கியமான ஒன்றாகக் கருதப்படுகிறது. கொள்ளுக்கும் கொழுப்பைக் கரைக்கின்ற தன்மை உண்டு. இளைத்தவனுக்கு எள்ளு, கொழுத்தவனுக்குக் கொள்ளு என்று சொல்வோம். இதில் கொழுப்பு என்றால் cholesterol என்று அர்த்தம். இந்தக் கொழுப்பை மாற்றக்கூடிய தன்மை இதற்கு உண்டு. புஷ்கரமூலத்திற்கும், குரோசானி ஓமத்திற்கும்கூட, இத்தகைய குணங்கள் உண்டு. இது மட்டுமல்லாமல் பிரம்ம ரஸாயனம், சிலாஜத், ஆலமக ரஸாயனம் போன்ற ஆயுர்வேத மருந்துகள், இருதயத்திற்கு நல்ல பலமளிக்கக்கூடியன. குறிப்பாக, ஊட்டச்சத்து மிகுந்த (Anti oxidant property) மூலிகைகள் இருதயத்திற்குப் பலனளிக்கக் கூடியவை.

டாக்டர் எல். மகாதேவன்

# தலைவலியாப் போச்சே!

'இருபத்து நான்கு மணி நேர சேவை' என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். இருபத்து நான்கு மணி நேரத் தலைவலியுடன் என்னைப் பார்க்க கணேஷ் என்பவர் வந்திருந்தார்.

"காலையில் இலேசாக ஆரம்பிக்கும் தலைவலி, மத்தியானம் முரசு அறைய ஆரம்பிக்கிறது. சாயங்காலம் ஆக ஆக, சம்மட்டியால் பிளப்பது போல வேதனையும் கடுமையும் அதிகரிக்கிறது. ஸ்கேன்கூடச் செய்துவிட்டேன். தலையில் ஒரு பிரச்னையும் இல்லை என்கிறார்கள்" என்று மிகவும் வருத்தப்பட்டார்.



நாடி பிடித்துப் பார்த்தேன். விஷயம் புரிந்து விட்டது. அவருடைய கேஸ் ஹிஸ்டரியை கவனமாகப் பரிசோதித்து விட்டு, சில மருந்துகள் தந்தேன். அடுத்த வாரம் வந்து பார்க்கச் சொன்னேன்.

எட்டு நாட்கள் காத்திருக்கும் பொறுமை கூட இல்லாமல், ஆறாவது நாளே கணேஷ் மீண்டும் வந்து நின்றார். "என்ன மருந்து தந்தீர்கள் ஸார்! அற்புதமாக வேலை செய்கிறது... தலைவலி பாதியாகக் குறைந்து விட்டது..." என்று மகிழ்ச்சி பொங்கப் பேசினார்.

"கணேஷ் உங்களுடைய தலைவலிக்குக் காரணம் என்ன தெரியுமா? கடுமையான மலச்சிக்கல். அதைக் குணப்படுத்தியதும், தலைவலி போயே போச்" என்றேன்.

அங்கங்களிலேயே சிறந்த உறுப்பு சிரஸ். இதற்குப் 'பிரதான்ய அங்கம்' என்று பெயர். பழைமையான மருத்துவப் புத்தகமான சரக சம்ஹிதையில், தலையில் வரும் நோய்களைப் பற்றியும், தலையினுடைய முக்கியத்துவத்தைப் பற்றியும், சரகர் 'யெந்த சிரஸீயம்' என்ற அத்தியாயத்தில் அருமையாகக் கூறியுள்ளார். தலையென்பது பிராணனின் உறைவிடம். புலன்களின் இயக்கத்திற்குக் காரணம், பிராண சக்தி நிறைந்திருக்கும் இடம் என்றும் சிரஸைப் பற்றிப் பெருமையாகக் கூறியுள்ளார். தலையில் உள்ள மர்மங்கள் பற்றி அடுத்த வாரம்.

(தொடரும்)

இன்று ஏதோ சரியில்லை எனக்கு.

காலையில் குளிக்கும்போது பாத்ரூம் குழாயில் 'ணங்'கென்று இடித்துக் கொண்டேன். தலையில் வகிடு பிரியும் இடத்தில் இன்னும் வலிக்கிறது.

ஆபீஸ் கிளம்பும் அவசரத்தில் காபி ஆசை வர, மனைவி கலந்து தந்த காபி கொதிக்கவே, நாக்குப் பொசுங்கிப் போன கோபத்தில் கத்திவிட்டேன். மாலை வீடு திரும்பும்போது மறக்காமல் ராவ்ஜி கடை பக்கோடாவுடன் போய் அவளைச் சமாதானப்படுத்த வேண்டும்.

பஸ் நிறுத்தத்துக்கு வரவும், மூஞ்சியில் கரிப்புகையைத் துப்பி விட்டு ஓடிவிட்டது பேருந்து. அடுத்த பஸ்ஸுக்காக இருபது நிமிடம் காத்திருந்து பிடித்ததில், பஸ்ஸில் செம கூட்டம். நசுங்கிப் போய் அலுவலகப் படிக்கட்டை நான் மிதித்தபோது, எங்கள் ஆபீஸ் சித்ரகுப்தன் இருபத்தைந்து நிமிடம் தாமதம் என்றான்.

இதோ 'ஹிட்லர்' கூப்பிட்டு விட்டார் 'டோஸ்' விட.

மானேஜர் என்ற பெயர்ப் பலகை பொருந்திய கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனேன்.

வழக்கம்போல சுப்ரபாதம் ஒலித்தது மானேஜரிடமிருந்து. 'தேமே' என்று கேட்டுக் கொண்டு நின்றேன். இந்த வருடம் எனக்குப் பதவி உயர்வு இருக்கிறது. இவர் 'அடிடா ராமா, அடி' என்று குட்டிக்கரணம் அடிக்கச் சொன்னாலும், நான் தயார். சும்மாவா? பதவி உயர்வு கிடைத்து விட்டால் மாதம் ஐந்நூறு ரூபாய் சம்பளத்தில் கூடுமே!

'பேஸ்த்' அடித்த மூஞ்சியுடன் என் இருக்கைக்குத் திரும்பினேன்.

முகத்தில் கிண்டல் சிரிப்பு வெளிப்பட, மறைக்க முயன்றபடி என்னை வேடிக்கை பார்த்தன அக்கம்பக்கத்து இருக்கைகள்.

'அடப் போங்கடா, இன்று நான்; நாளை நீங்கள்! நாளை என்ன நாளை, அடுத்த நொடியே கூட 'ஹிட்லரி'டமிருந்து உங்களுக்கு அழைப்பு வரலாம். கூடிய சீக்கிரமே நீங்களும் கிழிபட ஆசிர்வதிக்கிறேன்'

அவர்களை மனதுக்குள் சபித்தபடி, மானேஜர் அறையில் எதுவுமே நடக்காத முகபாவத்துடன் இருக்கையில் அமர்ந்தேன்.

நண்பன் நடராஜன் எதிரே வந்து அமர்ந்தான்.

"என்னாச்சுடா?"

'நடராஜன் எனது நெருங்கிய சிநேகிதன். கிரிக்கெட் முதல் கிளியோபாட்ரா வரை, முஷாரஃப் முதல் மும்தாஜ் வரை மேதாவிலாசம் காட்டுவான் தன் பேச்சில். ஆனால் ஒன்று. பேச்சில் விஷம் ஏதும் இல்லாத வெள்ளை மனசுக்காரன்.

அவனை விட்டால் அழுவதற்கு வேறு யார் இருக்கிறார்கள் எனக்கு? காலை முதல் எனது கதை கந்தலாகி வருவதைச் சொன்னேன்.

"யார் முகத்துலடா முழிச்சே, காலையில் எழுந்ததும்?" என்று கேட்டான்.

எதிர்வீட்டு மாசிலாமணி முகம் ஸ்விட்ச் போட்டது போல மனத்தில் எரிந்தது. காலையில் எழுந்து வெளி வாசல் பூட்டைத் திறந்து விடுவது, எனது தினசரி முதல் பணி. அதற்குப் பிறகுதான் மற்ற எல்லாமே. இன்றும் காலையில் வாசலுக்கு வந்தபோது, மாசிலாமணிதான்





கண்ணில் பட்டார். மகா டேஞ்சரான மணி அந்த ஆள். யாருக்கும் மறந்தும் கூட நல்லதை நினைக்காத நபர்.

நடராஜன் சொல்வது சரிதான். அந்த மாசிலாமணி முகத்தில் விழித்ததுதான் இத்தனை எனது அல்லாடலுக்கும் பிள்ளையார்

கிருஷ்ணா

சுழியே. இன்னும் இன்றைய தினம் ஓட நிறையப் பொழுது இருக்கிறது! எப்படி இருக்கப் போகிறதோ?






இனி நாளை முதல் வாசல கேட்டைத் திறக்கப் போகும் போது தரையைப் பார்த்து குனிந்தபடி 'நாணத்து'டன் தான் செல்ல வேண்டும். இல்லையேல், அவன் சீக்கிரமே அந்த வீட்டை விட்டுக் காலி செய்து கொண்டு ஓட, காலனி பிள்ளையாருக்குச் சிதர்



# வைச்ச குறி தப்பாது!

**து**ப்பாக்கி தூக்கினால் தங்கம் வாங்காமல் விடுவதில்லை இந்த இளம் சிங்கம் பிருத்விராஜ்.

கடந்த மாதம் டெல்லியில் தேசிய துப்பாக்கி சுடும் போட்டிகள் நடைபெற்று முடிந்தன. மவுலாகர் வகைப் போட்டியில், தனி நபர் சிங்கிள் டிராப் மற்றும் டபுள் டிராப் போட்டிகள் இரண்டிலும் ஐம்பதுக்கும் மேற்பட்டோர் பங்கேற்றனர்.

இந்த இரண்டு போட்டிகளிலும் பிருத்விராஜ் தொண்டமான் முதலிடம் பெற்று, இரண்டு தங்கப் பதக்கங்களைத் தட்டிப் பறித்து வந்துள்ளார். அத்துடன் தேசியக் குழுப் போட்டியிலும் பங்கேற்று பரிசு வென்றதன் மூலமாக, வெள்ளிப் பதக்கமும் பெற்றுள்ளார். ஆக, தேசிய அளவில் மூன்று பதக்கங்களை வென்று வந்துள்ளார்.

பொதுவாக துப்பாக்கி சுடும் போட்டிகளில் பங்கு பெற, பயிற்சி எடுத்துக் கொள்ளவே, பெருமளவில் பணம் தேவைப்படுமாம். துப்பாக்கி மட்டும் மூன்று லட்ச ரூபாய். தோட்டாக்கள் தனிச் செலவு. ஒரு போட்டியில் கலந்து கொள்ள, கட்டணம், போக்குவரத்து, தோட்டா செலவு என முப்பதாயிரம் வரை பணம் தேவைப்படுமாம்.

"தமிழ்நாட்டில் துப்பாக்கி சுடும் பயிற்சி முகாம் வசதிகள் அவ்வளவாக இல்லை. என் தந்தையின் சிறந்த பயிற்சியாலும், ஊக்குவிப்பாலும்தான், என்னால் இந்த சாதனையை எட்ட முடிந்தது. ஒலிம்பிக் போட்டிகளில் கலந்து கொண்டு தங்கப்பதக்கம் பெறுவதே என் குறிக்கோள்!" என்கிறார் பிருத்விராஜ் தொண்டமான்.

பிருத்விராஜின் அப்பா ராஜகோபாலத் தொண்டமான் புதுக்கோட்டை மன்னர். அம்மா சாருபாலா தொண்டமான், திருச்சி மாநகர மேயர்.

- திரு

தேங்காய்' லஞ்சம் கொடுக்க வேண்டும்.

மனத்தில் மாசிலாமணி முகத்தைத் தவிர்க்கும் திட்டங்களை ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்தபோது, மறுபடியும் ஹிட்லரிடமிருந்து அழைப்பு.

"நீங்களே பேசுங்க. ஹெட் ஆபீசிலிருந்து கடிக்கறாங்க" என்று கடுகடுத்தார்.

போன வாரம் நான் தயார் செய்து அனுப்பிய ஸ்டேட்மெண்ட்டில் தவறாம். ஆடிட்டிங்கில் மாட்டிக் கொண்டு விட்டதாம் அந்தக் கோப்பு.

"நீயெல்லாம் வேலைக்கு வந்து ஏன் கழுத்தறுக்கறே?" என்றார் ஹெட் ஆபீஸ் பெரிய தலை.

'டேய் மாசிலாமணி!' என்று மனசுக்குள் நற, நறத்தேன்.

**மா**னேஜர் அறையிலிருந்து வெளியே வந்து, நேரே டாய்லெட்டுக்குள் புகுந்தேன்.

ஹெட் ஆபீஸ் திட்டியதில் வயிறு கலங்கிப் போனது ஒரு காரணம். எனது தொங்கிப்போன முகத்தை அலுவலக சகாக்களிடம் காட்ட கூச்சம்.

மனத்தையும், முகத்தையும் கொஞ்சம் இலகுவாக்கிக் கொண்டு, டாய்லெட்டை விட்டு நகர்ந்த போதுதான் சுவர்க் கண்ணாடியில் எனது முகம் தெரிந்தது.

உடனே எனக்குள் ஃப்ளாஷ் அடித்தது.

வீட்டில் மாட்டியிருந்த ட்ரெஸ்ஸிங் ரூம் கண்ணாடி, ஆணியிலிருந்து கொஞ்சம் ஆட்டம் ஆட, அதைக் கழற்றி அலமாரியில் சார்த்தி வைத்திருந்தேன்.

காலையில் எழுந்ததும் முதலில் அதைத்தான் பார்த்தேன். கண்ணாடியில் எனது தூங்கி எழுந்த எண்ணெய் வடிந்த முகம். அப்படியானால் காலை எழுந்ததும் என் முகத்தில்தான் விழித்திருக்கிறேனா?

**எ**னது இருக்கைக்குத் திரும்பினேன். அதற்குள் எனக்குக் கிடைத்த ஹெட் ஆபீஸ் டோஸ் அங்கு பரவிவிட்டது போலும். நடராஜன் மீண்டும் அருகில் வந்தான்.

"எல்லாம் உன் எதிர்வீட்டு மாசிலாமணி முகமுழி. பேசாமல் நீ வீட்டை மாத்திடு" என்று ஆறுதல் சொல்ல ஆரம்பித்தான்.

"சேச்சே, எனது அவசரத்திலும், கவனக்குறைவாலும் ஏற்பட்ட தவறுகள் இதெல்லாம். இதிலே யாரையும் குற்றம் சொல்ல முடியாது" என்றேன், அவசரமாய். அவரவர் முகம் அவரவர்களுக்கு உசத்திதானே! ●



"இண்டர்வியூக்குப் போனா இங்கிலீஷ்,
ஈ-மெயில் அனுப்பணும்னா இங்கிலீஷ்,
கம்ப்யூட்டர் கத்துக்கணும்னா இங்கிலீஷ்,
கணவருடன் பார்ட்டிக்குப் போனா இங்கிலீஷ்,
பசங்க படிக்கற ஸ்கூலுக்குப் போனா இங்கிலீஷ்,
எங்கே போனாலும் இங்கிலீஷ்... இங்கிலீஷ்!"

என்ன... மற்றவர்கள் இங்கிலீஷில் பேசுவதை உங்களால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் அவர்களிடம் உங்களால் சகஜமாக இங்கிலீஷில் பேச முடியவில்லை. ஏதாவது தவறாகப் பேசிவிடுவோமோ என்று தயக்கமாக இருக்கிறது.

**இதுதானே உங்க ப்ராப்ளம்?**

## NO PROBLEM !

**உங்களது ஓய்வு நேரத்தில் தினசரி அரைமணி** நேரம் செலவிட்டால் போதும்!

**ஸ்பீச் ஜெனரேட்டிங் ஃபார்முலா SGF™** அடிப்படையில் நாங்கள் அமைத்துள்ள ஓர் எளிய பயிற்சியின் மூலம் நீங்கள் சரளமாக இங்கிலீஷ் பேசக் கற்றுக் கொள்ளலாம்.

கடந்த **22** ஆண்டுகளில் **15** லட்சத்திற்கும் மேற்பட்டவர்கள் எங்களது **ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸின்** மூலம் பயனடைந்துள்ளனர்.

வீட்டிலிருந்தபடியே, ஓய்வு நேரத்தில் தினசரி அரைமணி நேரம் செலவிட்டு எங்களது பாடங்களைப் பிராக்டிஸ் செய்தால் போதும்.

**தயக்கமின்றி இங்கிலீஷ் பேச உங்களால் முடியும்.**

அருகிலுள்ள கூப்பனைப் பூர்த்தி செய்து இன்றே அனுப்புங்கள். பாடங்களை **V.P.P.** மூலம் உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

கோர்ஸ் பாடங்களை தினசரி அரைமணி நேரம் பிராக்டிஸ் செய்து, மடமடவென இங்கிலீஷில் பேச ஆரம்பியுங்கள்.

**இதோ கூப்பன்**

நானும் விவேகானந்தாவின் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர விரும்புகிறேன். எனக்குப் பாடங்களை **V.P.P.** மூலம் அனுப்புங்கள். தபால்காரரிடம் ரூ.395/- செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.

பெயர் : ..............................

முகவரி : ..............................

..............................

..............................பின்கோடு..............................

# VIVEKANANDA INSTITUTE

9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை – 600 017.

EKL

**INDIA'S No.1 ENGLISH TRAINING INSTITUTE**

E-Mail: vinglish@vsnl.com Visit us at: www.vivekin.com



கூப்பனை 15 நாட்களுக்குள் அனுப்புவோருக்கு பாடங்களுடன் 416 பக்கங்கள் கொண்ட இங்கிலீஷ் - தமிழ் டிக்ஷ்னரி இலவசம்.

# உள்ளம் கேட்குமா மோர்?

'12B'க்குப் பிறகு மற்றுமொரு புதுமையான ஒப்பனர் கொண்டு 'பெப்ஸி'யை நுரை பொங்கத் திறந்திருக்கிறார், ஒளிப்பதிவாளர் – இயக்குநர் ஜீவா. அண்ணாநகரிலிருக்கும் அவரது 'மேங்கோ ஸ்டுடியோ'வில் ஜீவாவைச் சந்தித்த போது...

" 'பெப்ஸி' என்பது சும்மா தமாஷுக்காக வைச்ச பேரில்லை. பிரியா, இமான், பூஜா, ஷாம், ஜரீனா என்ற ஐந்து நண்பர்களின் முதலெழுத்தைக் கூட்டி வைத்ததுதான் இந்த டைட்டில்" என்று மெல்லிய சிரிப்புடன் ஆரம்பித்தார் ஜீவா.

**மூன்று பெண், இரண்டு ஆண் நட்பு ஃபார்முலாவுக்குள் நீங்கள் மாட்டிக்கொண்டு விட்டீர்களே!**

ஒரு காலேஜ்னா, ஆயிரம் பேர் படிப்பாங்க. அவங்களுக்குள் இரண்டாயிரம் கதை இருக்கும். அதையெல்லாம் ஒரே சினிமாவிலே சொல்ல முடியாமத்தான், சுவாரசியமா

• பூஜா

• ஜீவா

• அசின்

அஞ்சு பேர் நட்பைப் பற்றிச் சொல்லி யிருக்கேன். நம்ப கையிலே அஞ்சு விரலிருக்கு. ஒவ்வொண்ணும் ஒவ்வொரு விதம். அதுமாதிரிதான் இந்த 'கேங்'கும்! போட்டிருக்கிற டிரஸ்லேயிருந்து, காட்டுகிற இமோஷன் வரை, ஒவ்வொண்ணும் ஒரு ரகம். ஆனால் அதையும் தாண்டி, நட்புங்கிற ஒரு விஷயம் அவங்களை எந்த அளவுக்கு இறுக்கமாப் பிணைச்சதுன்னு சொல்லியிருக்கோம்.

**உங்க ஃபேவரிட் ஷாம், லைலா தவிர, மற்ற மூன்று பேரும் புதுமுகங்களாமே!**

ஆமாம்! அவங்களைத் தேடிக் கண்டு பிடித்ததே ஒரு ஜாலியான கதைதான். ஒரு செல்லுலார் விளம்பரத்தை தற்செயலாப் பார்த்தப்போ, பளிச்சென்ற ஒரு முகம் ஃப்ளாஷ் ஆச்சு... 'அட— இது நம்ப ப்ரியா'ன்னு மனசுக்குள்ளே மூட்டைக் கட்டிக்கிட்டு இருந்தவரை, கடைசி நிமிஷத்தில் பெப்ஸியில் இழுத்துப் போட்டுட்டோம். நல்ல உயரம், வசீகரமான சிரிப்புன்னு துடிப்பானவர். நான்கு பேர் தேர்வாகிவிட்ட நிலையில், ஐந்தாவது பெண்தான் இலேசுலே கிடைக்கலை. அப்ப, பெங்களூரில் மாடலிங்



• ஷாம்



• லைலா



• சமீர்

கோ-ஆர்டினேட்டராக இருக்கும் பூஜா, எனக்கு ஒரு சில பெண்களை அறிமுகப் படுத்தினார். யாரையும் பிடிக்கலே. "பூஜா... அந்த கேரக்டருக்கு நீங்களே பொருத்தமா இருப்பீங்க.. நடிக்கறீங்களா"ன்னு கேட்டுட்டேன். அவங்களுக்கு இனிய அதிர்ச்சி. முதலில் கொஞ்சம் தயங்கியவர், அப்புறம் ஒப்புக் கொண்டார். தைரியமான பொண்ணு. எம்.பி.ஏ. பட்டதாரி.

'டிக்' பண்ணிட்டேன். அந்தப் பொண்ணு பேரு அசின். கேரளாவில் இருக்காங்க. அடுத்தது சமீர். எங்க பக்கத்து வீட்டுப் பையன். கம்ப்யூட்டர் இன்ஜினியரிங் படிச்சிட்டு, அமெரிக்கா போக

**'12B'யின் திரைக்கதையை, டபுள் ஆக்ஷன் என நினைத்துக் கொண்டு சராசரி ஆடியன்ஸ் குழம்பியதால்தான், அந்தப் படத்தின் புதுமை ரசிக்கப்படாமல் போய் விட்டதா?**

நான் தமிழ் ரசிகனை நம்பினேன். அதனால் தான் '12B'யை இந்தியில் கூட எடுக்காமல் தமிழில் முயற்சி செய்தேன். இலேசாக கன்ஃப்யூஸ் ஆகி, பிறகு சரியாகக் கதையை நூல் பிடித்துப் பார்த்து விடுவார்கள் என்று நம்பினேன். ரசிகர்களும் அப்படியே செய்தார்கள். ஆனால் மீடியா செய்த தவறான பிரசாரத்தால், நான் நினைத்த அளவுக்கு 'ஹிட்' ஆகவில்லை. இருந்தாலும் அந்த டபுள் டிராக் விஷயம் ரசிக்கப்பட்டதை மறுக்க முடியாது.

**சமீபகாலமாக, புற்றீசல் போல ஃப்ரெண்ட்ஸ் பற்றிய படங்கள் நிறைய வந்துவிட்டன. 'பெப்ஸி' என்ன ஆகுமோ என்ற கவலை இருக்கா?**

'என்ன கதை என்பது முக்கியமில்லை. என்ன சொல்றே, எப்படிச் சொல்றே?'– இந்த விஷயம் தான் படத்தை நிக்க வைக்கும். ஹாரீஸ் ஜெயராஜ், சுஜாதா, தோட்டாதரணி, வி.டி.விஜயன், ராஜுசுந்தரம், விக்ரம்தர்மான்னு திறமையுள்ள ஆட்களெல்லாம் ஓம்னி லிமிடெட் தயாரிப்புக்காக ரொம்ப சின்ஸியராப் பண்ணியிருக்காங்க. படமே ப்ளெசன்டா இருக்கு. வேற கலர்லே இருக்கு. ரொம்ப பெரிசா யோசிச்சு, ரொம்ப ரொம்ப எளிமைப்படுத்திக் கொடுத்திருக்கோம். நிச்சயம் இது நிக்கும்.

**நிஜமான ஜீவா யார்? ஒளிப்பதிவாளரா? இயக்குநரா?**

'இயக்குநர்' என்பது சும்மா அடைமொழி மாதிரி! போரடிச்சா போட்டுக்குவேன். மற்றபடி, என்னோட காதல், காமிரா மீதுதான். என்னோட வேரும் நம்ப ஊருலதான். நிறையப் பணம் சேர்க்கிறதுக்கு துபாய்க்கு வேலைக்குப் போகிற மாதிரி, எனக்குப் பணம் தேவைப்பட்டா, இந்திக்குப் போவேன். மற்றபடி தமிழ் ஆடியன்ஸுக்கு நீட்டான ஃபிலிம் கொடுத்து சந்தோஷப்படுத்தணும்ங்கிறதுதான் என்னோட ஆசை.



**நீங்களே வியந்து போய் ரசிக்கிற சினிமாக் கலைஞன் யார்?**

ஒருத்தர் எம்.ஜி.ஆர். மீடியாவை ரொம்ப பர்ஃபெக்டா, பிரம்மாண்டமா பயன்படுத்திய ஒரே மனிதர் அவர்தான். என்ன ஒரு தீர்க்க தரிசனம்! எவ்வளவு துல்லியமான கணிப்பு! "மாபெரும் சபைதனில் நீ நடந்தால்", "நான் ஆணையிட்டால்" இந்தப் பாடல் வரிகளாலேயே, அவர் ஏதோ பெரிசா திட்டமிட்டிருந்தது தெரியுது.

இன்னொருத்தர் டைரக்டர் ஸ்ரீதர். காமெடிப்படம்னா அது 'காதலிக்க நேரமில்லை' மாதிரி இருக்கணும். உருக்கமான படம்னா 'நெஞ்சில் ஓர் ஆலயம்' மாதிரி இருக்கணும். இரண்டுமே அவரோடதுதான். ஆனால் மாறுபட்ட அசத்தல்கள். திரைக்கதை, வசனம், டைரக்ஷன் எல்லாவற்றிலும் அந்தப் பளீர் வித்தியாசம் தெரியும்.

**மெல்ல சினிமா அழிஞ்சிடுமா?**

சமீபத்தில் பூனா திரைப்படக் கல்லூரியில் வைக்கப்பட்டிருந்த பழைய காலத்து கறுப்பு – வெள்ளைப் படப்பெட்டிகள் எரிந்து சாம்பலாகிப் போனதா ஒரு செய்தி வந்தது. அதைப் படிச்சப்போ, தன்னோட வீட்டுலே ஏதோ கெட்ட காரியம் நடந்தது மாதிரி, வேதனையா இருந்ததுன்னு டைரக்டர் கே. பாலசந்தர் சொன்னார். சினிமாவை வெறும் அறுவடை சாதனமா நினைக்காமல், கே. பாலச்சந்தர் மாதிரி சினிமாவைக் காதலிக்கும் கலைஞர்கள் இருக்கும் வரை, சினிமா அழியாது. ஏதோ ஜிகினா சமாசாரம் எல்லாம் கலந்து கட்டி ஒரு படம் எடுத்தோமா, கலெக்ஷன் பார்த்தோமான்னு இல்லாமல், தொலை நோக்குப் பார்வையோட, தரமான சிந்தனை கொண்ட படங்கள் எடுக்கணும். அதற்கான முயற்சிகளை நானும் செஞ்சிட்டிருக்கேன்.

**'பெப்ஸி'யிலே அப்படிப்பட்ட சிந்தனை இருக்குமா?**

மேடை மாதிரி, மைக் பிடிச்சு, நான் எப்போதும் போதனை செய்வதில்லை. ஆனா, நான் படத்தில் சொல்லியிருக்கும் நிஜத்தை ஆடியன்ஸ் ஒப்புக் கொள்வார்கள். தங்கள் வாழ்விலும் இப்படியொரு விஷயம் நடந்ததை ஒப்பிட்டுப் பார்ப்பார்கள். ஸோ, பெப்ஸி, கதை அல்ல; நிஜம்!

சந்திப்பு: அனுராதா சேகர்



இந்தியாவின் முன்னணி ஜோதிடர்
நியூமராலஜிஸ்ட், வாஸ்து நிபுணர்
பேராசிரியர், டாக்டர்.

# வஞ்சி வசந்தன்

M.A., Ph.D., D.Litt (USA)

உலகில் திறக்க முடியாத பூட்டே கிடையாது. சரியான சாவியைக் கொண்டு திறந்தால் எந்தப்பூட்டையும் திறந்து விடலாம். அதுபோல், வாழ்வின் பிரச்சனைகள் தீர சரியான வழியைக் காட்டுவதுதான் ஜோதிட எண்கணித சாஸ்திரம்.

பிறந்த தேதிக்குப் பொருத்தமான குபேர ராஜ வசிய அதிர்ஷ்ட எண்ணில் பெயர் அமைத்து, பெயர் வசியம் செய்து கொண்டால் வாழ்வில் உண்டாகும் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் நல்லமுறையில் தீர்வு காண முடியும். எந்தத் தொழில் செய்தாலும் அதிர்ஷ்டப்பெயர் அமைத்துத் தொழில் வசியம் செய்து கொண்டால் குறுகிய காலத்தில் மிகப்பெரிய வெற்றியும், லாபமும் அடையலாம்.

அதிர்ஷ்டப் பெயர் அமையாததால் தொடர்ந்து பல கோடி ரூபாய் நஷ்டத்தில் இயங்கிக் கொண்டிருந்த இந்தியாவின் மிகப் பெரிய வர்த்தக நிறுவனங்களுக்கும், பிரபலமான தொழில் மையங்களுக்கும் இசைவான அதிர்வு எண்களில் பொருத்தமான அதிர்ஷ்டப் பெயர் அமைத்துக் கொடுத்து ஒரே வருடத்தில் லாபம் கொழிக்கும் முன்னணி நிறுவனங்களாகத் திகழச் செய்திருக்கிறார் பெயரியல் மாமேதை பேராசிரியர் வஞ்சி வசந்தன்.

வீடுகள், கடைகள், தொழிற்சாலைகளில் ஏற்படும் சகல விதமான வாஸ்து குற்றங்களும் நீங்க, குறைந்த செலவில் நீங்களே செய்து கொள்ளக்கூடிய எளிய பரிகாரங்களை சொல்லித் தந்து, கெடுதலான பலன்கள் குறைந்து நல்ல பலன்கள் நடக்க வழிகாட்டுகிறார் வாஸ்து சாம்ராட் வஞ்சி வசந்தன்.

ஜாதகம், கைரேகை, எண் கணிதம், அதிர்ஷ்டக் கற்கள் ஆருடம் பார்த்துப் பலன்கள் சொல்கிறார். கேரள பிரசன்ன முறையில் சிக்கலான பிரச்சினைகளையும் தீர்த்து வைக்கிறார்.

தொழில் முடக்கம், வியாபாரத்தில் நஷ்டம், சொத்து கடன், வழக்கு பிரச்சினைகள் தீராத வியாதிகள், கணவன் மனைவிக்கிடையே சண்டை, சச்சரவுகள், படிப்பில் மந்தம், திருமணத்தடை, புத்திர தோஷம், காதல் தோல்வி, மனக் கோளாறுகள், செய்வினைப் பாதிப்புகள், குடிபோதை மருந்துகளுக்கு அடிமை போன்ற சகலவிதமான பிரச்சினைகளுக்கும் தீர்வு காண நல்ல முறையில் ஆலோசனைகள் வழங்குகிறார். வாழ வழியிருக்கு வருந்துவது ஏன் ? வாழ்க்கை சுலபமானது. வாழ்க்கை வாழ்வதற்கே !

வந்து சந்தியுங்கள் ! — வாழ்க வளமுடன் — வாழ்ந்து மகிழுங்கள் !!

தொடர்பு கொள்ளவேண்டிய முகவரி :-



## சரோஜ் நியூமராலஜி ரிசர்ச் சென்டர்

9, தென்னம்பாளையம் எக்ஸ்டென்சன் முதல் வீதி,
டி.கே.டி. பெட்ரோல் பங்க் எதிர்புறம், பல்லடம் ரோடு,
திருப்பூர்-4. போன் : 0421-2232317 வீடு 04544-244475.
செல் : **98430-76465, 98421-82171.**

E-mail : vanchivasanthan@mailcity.com vanchi.vasanthan@usa.net
Website : http://www.angelfire.com/va/vanchivasanthan



# பாபு யோகேஸ்வரன்

'அமலி இந்த முறையும் விளையாடுகிறாளோ..' என்று நினைக்க முடியாத அளவுக்கு, அவன் கண்கள் பதற்றத்தில் தவித்தன.

"அட நாயே... உங்க அம்மாயி பேசதுங்கறேன். வந்து பேசுடா..."

இருக்கையை உதறி எழுந்த விநாடியில்,

"அமலி... ப்ளீஸ்... நான் இல்ல.. ஏதாவது பேசி சமாளிச்சு வச்சுடு..." என்று அறையை விட்டு வெளியேறினேன்.

நான் அம்மாயியை விட்டு ஒதுங்கிய நேரம்.. அல்லது ஊரை விட்டு வெளியேறிய நேரம்... இரண்டும் ஒன்றுதான். இதற்குமேல் ஊரில் இருக்க முடியாது என்கிற நிலை வருகிறபோதுதான் பெரும்பாலான கால்கள் ஊரைவிட்டு வெளியேறுகின்றன.

"பேனா புடிக்கற பயலுக்கு எதுக்குடா நவதானிய யாவாரம்...?" அம்மாயியின் கேள்விக்கு வழக்கம்போல் மௌனமாக இருந்தேன்...

"தலைமலை அடிவாரம் ஒரு கோடியா வெங்காயம் புடிக்கப் போயிருக்கே... சிக்கத்தம்பூர் போயி நெல்லு அளந்துருக்கே... சென்னப்பேரன் சின்ன மாமனாரு வந்து கதைகதையா சொல்லிட்டுப் போறாரு – உங்க பேரனுங்களா... லாரி எடுத்துக்கிட்டு வந்தாருங்க.. ஒரு கிழத்தெரு பையன் மாதிரி தெரிஞ்சுது. சேருமானம் சரியில்ல போலருக்கு... எரநூத்து முப்பது ரூவா நெல்ல.... எரநூத்தி அறுவது ரூபாய்க்கு அளந்து ஏத்திக்கிட்டுப் போனாரு... நீங்க எந்த ஊரு யாவாரிங்கன்னேன். திருச்செங்கோடுன்னாரு. கூட வந்த பையனை விசாரிச்சாத்தான் தெரியுது. சிதம்பரம் வாத்தியாரு பேரனாமுல்ல.... மல ஊட்டுப் புள்ளைங்களா...ன்னு வந்து கேக்கறாரு...' நெசந்தானா...?"

சுற்றுச்சுவர் கதவு தட்டப்படும் சத்தம்

கேட்டுத் திரும்பிப் பார்த்தது அம்மாயி.

"இந்தா இந்த வூடுதான்... அதோ அந்தப் பையன்தான்..."

தலைப்பாகையும், வெற்று டம்புமாக நான்கைந்து ஆட்கள் உள்ளே வந்தார்கள்.

"ஏப்பா... வெள்ளிக்கிழமை வந்து பணம் கொடுக்கறேன்னு சொன்னியே... இன்னிக்கு என்ன ஆச்சு... சனி ஒண்ணு, நாயிறு ரெண்டு, திங்கெ மூணு...செவ்வா நாலு... நாலு நா ஆச்சு... ஒரு தகவலாவது சொன்னியா... சின்னப்புள்ள வெள்ளாமைங்கறது சரியாப் போச்சு பாத்தியா...?"

நான் வியாபாரம் செய்த வண்டவாளம் வாசல் முழுவதும் இறைந்தது.

"இந்தா பெரீம்மா... உம் பேரன் பணம் கொடுக்காம... வாசலவுட்டு நவுர மாட்டோம்... இல்லாட்டி நீ கொடு... இவுனுக்கு நெல்லு புடிச்சுக் கொடுத்த தெண்டத்துக்கு, எங்க ஊரு பஞ்சாயத்துல வெனக்குக் கொளுத்தி கையைக்கட்டி உக்கார வச்சுட்டாங்க.. எங்க ஆயி மட்டும் பத்துப் பேருக்கு முந்தானை விரிச்சாளா... அவளும் ஒருத்தனுக்குத்தான் முந்தி விரிச்சா... நான் என்னத்துக்குப் பஞ்சாயத்துல உக்காரணும்...?"

மாரியம்மன் கோயிலில் கூடிய பஞ்சாயத்தில் பளீரென்று என் கன்னத்தில் அறை விழுந்தது.

அலறக்கூட சக்தியின்றி அம்மாயி திகைத்துப் போய் நிற்க, ஊர் என்னை வேடிக்கை பார்த்தது.

என்ன நடந்தாலும் ஊர் வேடிக்கை மட்டும்தான் பார்க்கும் என்பதை நான் உணர்ந்த தருணம் அது! பிறகு ஒரு ஆய்வுக் கட்டுரையில் அக்பர் என்கிற பிரபல முகலாய மன்னர், பஞ்சாபில் மிர்ஸா ஹக்கிமுக்கு எதிராகத் தனது படைகளைத் திரட்டிக் கொண்டு போய்ச் சண்டை போட்டபோது, வெகுஜன மக்கள் எல்லாம் உப்பரிகைகளின் மீதிருந்தும், மரங்கள் மற்றும் பாறைகளின் மீதிருந்தும் வேடிக்கை பார்த்தார்கள் என்று படித்தபோது, நான் ஆச்சரியப்படவில்லை.

உலகில் எது நடந்தாலும் பொதுவான மக்கள் வேடிக்கை பார்த்துக் கொண்டுதான் இருப்பார்கள்.

ஆனால் அந்த நேரம், எனது ஊர் மீது கொண்ட ஏகதேசமான வெறுப்பினால் கைப்பையைக் கூட எடுக்காமல், வழக்கம் போல பன்னீரிடம் பணம் வாங்கிக் கொண்டு பஸ் ஏறிவிட்டேன்.

ஒரு மாதம் போன பிறகு – ரேஷனில் சர்க்கரை வாங்கவும், நாமக்கல் வங்கியில் தாத்தாவின் பென்ஷன் பணம் வாங்கவும், அம்மாயி என்ன செய்திருக்கும் என்று யோசித்தபோது, பன்னீர் கடிதம் எழுதியிருந்தான்.

நான் நட்டத்திற்கு நெல் விற்றதால் பணம் கொடுக்க முடியாமல் போன விவசாயி, அடுத்த மூன்று தினங்களுக்கு வீட்டு வாசலிலேயே உட்கார்ந்து கொண்டிருந்ததாகவும், அம்மாயி, தன் எஞ்சிய கால வாழ்க்கைக்காக நிரந்தரவைப்புத் தொகையாக வங்கியில் போட்டு வைத்திருந்த பத்தாயிரம் ரூபாய் பணத்திலிருந்து கடன் பெற்று, அந்த விவசாயிக்குக் கொடுத்து அனுப்பி வைத்ததாகவும் எழுதியிருந்தான்.

# அம்மாயி

மதியம் மூன்று மணி அளவில் ப்ளாக்



''தாத்தா! உங்களுக்கும் படிப்புக்கும் ரொம்ப தூரம்னு அப்பா சொல்றாரு...!''

''ஹி...ஹி.... தினம் ஐந்து கிலோ மீட்டர் நடந்தே பள்ளிக் கூடம் போனேனே, அதைச் சொல்லியிருப்பான்!''

– சி.பி.செந்தில் குமார்

டீ தயாரித்து, எலுமிச்சை நறுக்கி எடுத்து வந்து மேஜை மீது வைத்தாள் அமலி. சில விநாடிகள் என்னையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, அலமாரியிலிருந்து ஒரு புத்தகத்தை உருவி எடுத்து வந்து, பிரித்தபடி என் எதிரில் உட்கார்ந்தாள்.

"...அவள் உங்கள் எல்லோரையும் விட முக்கியத்துவம் வாய்ந்தவள். ஏனென்றால், நான் நீரூற்றி வளர்த்தது அவளைத்தான். அவளைத்தான் கண்ணாடிக் கூண்டில் வைத்துப் பாதுகாத்தேன்... அவளுக்காகத் தான் தட்டி மறைப்பை வைத்தேன்... அவளுடைய பெருமிதப் பேச்சையும் கேட்டேன். ஒவ்வொரு சமயம் அவள் ஊமையாய் நின்றதையும் பார்த்துக் கொண்டிருந்தேன். அவள் என் ரோஜா!"

எலுமிச்சையைக் கையிலெடுத்து ஆனால், பிழியாமல் ஒருவித குழப்பத்தோடு அமலியை நிமிர்ந்து பார்த்தேன்.

"இப்ப எதுக்கு குட்டி இளவரசனைப் படிக்கிறே..."

பதில் சொல்லாமல் அமலி தொடர்ந் தாள்...

"உன்னுடைய ரோஜாவுக்கு நீ செல வழித்த நேரம்தான் ரோஜாவை உனக்கு அவ்வளவு முக்கியமானதாகச் செய்கிறது.... மனிதர்கள் இந்த உண்மையை மறந்துவிட் டார்கள் என்றது நரி. ஆனால், நீ இதை மறக்கக் கூடாது. நீ பழக்கப்படுத்திக் கொண்டதற்கு நீ என்றுமே பொறுப்பாளி யாகிறாய்... உன் ரோஜாவுக்கு நீ தான் பொறுப்பாளி..."

பால் கலக்காத தேநீரின் பரப்பில் எலுமிச் சைச் சாறு திவலை திவலையாய் மிதந்தது...

"போதும் அமலி... அம்மாயி ஃபோனில் என்ன சொல்லிச்சி?"

அமலி சிரித்தாள்...

"போஸ்ட் ஆஃபீஸ்ல பணம் கட்டி ஃபோன் வாங்கிருச்சாம். மொத மொதல்ல உங்கிட்டதான் பேசணும்னு பன்னீர்கிட்ட நம்பர் வாங்கிப் பேசியிருக்கு... நீ என்னமோ பெரிய இவன்மாதிரி..."

நான் கையை உயர்த்தித் தடுத்தேன்...

"நீ யாருன்னு கேக்கலியா?"

"இல்ல."

என் கண்களையே உற்றுப்பார்த்த அமலி,

"ஆனா, உன்னை பத்திரமா பார்த்துக்கச் சொல்லிச்சு."

அதிகாலை நான்கு மணி இருக்கும். எதனாலோ தூக்கிவாரிப் போட்டு, திடுக்கிட்டு விழித்தேன். அந்த அதிர்ச்சியில் அமலியும் விழிக்க,

"என்னாச்சு...?" என்றாள்.

"நீ தூங்கு அமலி... நான் ஊருக்குப் புறப் படறேன்..."

"எதுக்கு..?"

"அம்மாயியைப் பார்க்க..."

அமலி கண்களைத் தேய்த்து தூக்கத்தைக் கலைத்தாள்.

"பத்து வருஷமா இல்லாம... இப்ப என்ன திடீர்னு?"

போர்வையை உதறி, படுக்கையிலிருந்து எழுந்தேன்...

"இல்ல ஊரை விட்டுக் கிளம்பறப்ப.. மறுபடி திரும்பி வருவேனா... மாட்டே னான்னு அம்மாயிகிட்ட சொல்லிக்காமயே வந்துட்டேன்... இப்ப சொல்லிட்டு வரணும்னு தோணுது..."

பீரோவைத் திறந்து, துண்டை எடுத்தவாறு குளியலறை நோக்கி நான் நகர...

"ஒரு நிமிஷம்..." என்றாள் அமலி....

"என்ன?"

"நானும் வரவா...?"

இரண்டு கைகளையும் விரித்து அவளை அழைத்தேன்...

"வா!"

(முற்றும்)

# பஞ்ச துவாரகா யாத்ரா



**GUJARAT**



**TOURISM**



**GUJARAT TOURISM**

*(A Govt. of Gujarat Undertaking)*

Tourism Complex, Wallajah Road, Chennai - 600 002.

Tel No. 25366613 Res : 24794159 E-mail : gujarattourism@vsnl.net

**பஞ்ச துவாரகா யாத்ரா : 12 நாள் / 11 இரவுகள் சுற்றுலா.** *தாகோர் துவாரகா/ துவாரகா/பெய்ட்துவாரகா/கங்கரோலி/ஸ்ரீநாத் துவாரகா / (சோம்நாத் / நாகேஸ்வர் / ஜோதிர்லிங்கங்கள்) ராஜ்கோட் / போர்பந்தர் /உதயப்பூர்* மற்ற இடங்கள் உட்பட பயணச் செலவு **ரூ.7,300/-** (போக வர இரண்டாம் வகுப்பு இரயில் கட்டணம், சைவஉணவு, உயர்தர இரண்டு படுக்கை அறை கொண்ட தங்கும் வசதி, டீலக்ஸ் டிரான்ஸ்போர்ட், கைய்டு சர்வீஸ் மற்றும் சிறப்பு வழிபாடு வசதிகள் உட்பட)

**சென்னையிலிருந்து சுற்றுலா புறப்படும் நாள் : 16.04.2003**
**திரும்பும் நாள் : 27.04.2003**

சென்னை - அகமதாபாத் மற்றும் திரும்புதல் நவஜீவன் எக்ஸ்பிரஸ் மூலம். அகமதாபாத் மற்றும் இதர இடங்கள் சுற்றிப் பார்க்க - குஜராத் சுற்றுலாத்துறை சொகுசு பஸ் மூலம் செல்லுதல்.

**மற்றும் இதர விவரங்களுக்கு Deputy Manager (Marketing) மேலே குறிப்பிட்டுள்ள முகவரியில் தொடர்பு கொள்ளவும்**

மேற்கண்ட சுற்றுலா மார்ச் மாதம் (24.3.2003 முதல் 4.4.2003 வரை) நடத்தப்படுகிறது. கட்டணம் ரூ.6,630/-



# S.V.முதியோர் இல்லம்



## Charitable Trust (Reg)

இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் டாக்டர்களும், நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எல்லா எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

*முதியோர் சேவை பெரியது!*

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

# S.V. HOME FOR AGED

## Charitable Trust (Reg)

**# 50 / 88, Panchali Amman Kovil Street, (Near Arumbakkam Post Office)**
**Arumbakkam, Chennai - 600 106 Tel. Off: 2475 5700, 2475 1356.**

# ஒன் மினிட் உமா!



இந்தியக் கணவன்மார்களுக்கு அதிக எரிச்சலூட்டுவது அவர்கள் வீட்டுப் பெண்கள் டிரஸ் செய்து கொள்ள எடுத்துக் கொள்ளும் நேரம் தான்.

ஆண் குலத்தின் துயர் துடைப்பதற்கென்றே வந்திருக்கிறார் பெங்களூரின் அழகுக் கலைஞர் உமா ஜெயகுமார். ஹேர் ஸ்டைல், மேக்-அப், புடைவை கட்டுவது... என எல்லாமே ஒரு நிமிடத்திற்குள் செய்து அசத்தி, லிம்கா புக் ஆஃப் ரெகார்ட்ஸில் இடம் பிடித்து விட்டார். ஒரே நிமிடத்தில் காதில் ஆறு துளைகள் போட்டு விடுவாராம், அதுவும் வலியின்றி! ஒரு நாளில் பன்னிரண்டு பேருக்கு மணமகள் அலங்காரம் செய்வது இவரின் சிறப்பு. புடைவையைக் கொசுவி, நீட்டாக 'பின்' பண்ணி, ஒரு நிமிடத்திற்கும் குறைவான நேரத்தில் சிக்கென்று கட்டி விடுகிறார். வேகம்.. வேகம்... ஆனாலும் கச்சிதம்!

"இந்தியாவிலேயே மிக வேகமான ப்யூட்டிஷியன் என்ற ரெக்கார்டு பண்ணியதில் மகிழ்ச்சி. தற்சமயம் கின்னஸுக்காக பயிற்சி பண்ணிக் கொண்டிருக்கிறேன்" என்று சொல்லும் உமா, கண்ணைக் கட்டிக் கொண்டு கூட, கூந்தல் அலங்காரம் செய்கிறார்!

உமாவின் உதவியாளரான விசாலாக்ஷிக்கு வாய் பேசாது, காது கேட்காது. ஆனால் குறிப்பறிந்து டக்டக்கென்று கொண்டை ஊசியும் ஹேர் ஸ்ப்ரேயுமாக நிற்கிறார். இன்னொரு உதவியாளர் ப்ரியா. இவருக்குக் கால்கள் கிடையாது. கையிலும் இரண்டே விரல்கள். ஆனால் அவருக்கும் தன்னம்பிக்கை ஊட்டுகிறார் உமா. ப்ரியாவும் அழகுக் கலையில் தேர்ச்சி பெற்றுக் கொண்டிருக்கிறார்.

கர்நாடக ஆளுநராக ரமாதேவி பதவிப் பிரமாணம் எடுத்துக் கொண்ட நாளன்று, அவருக்கு ஏழே நிமிடங்களில் ஹேர் ஸ்டைல், மேக்-அப், உடையலங்காரம் என செய்து, ஆளுநரிடம் மனம் திறந்த பாராட்டுப் பெற்றதை மறக்க முடியாது என்கிறார் உமா. கடந்த மாதம் தில்லி திஹார் ஜெயிலில், மேக்-அப் பற்றிய ஒரு முகாமும் நடத்தியிருக்கிறார்! ஒரே நிமிடத்தில் சாதனை புரிந்த உமா முப்பதே விநாடிகளில் செய்வதற்குண்டான தீவிரப் பயிற்சி மேற்கொண்டுள்ளார். மார்ச் மாதத்தில் 'ரிப்ளீஸ் பிலீவ் இட் ஆர் நாட்' நிகழ்ச்சியில் உமாவின் சாதனையும் இடம் பெற வாய்ப்பிருக்கிறதாம்.

— எல்.எஸ்.

'திரும்ப... திரும்ப பார்த்து பார்த்து' 'இச்சு தா... இச்சு தா' போன்ற காதல் பாடல்களை எழுதிப் பிரபலமான சினிமா பாடலாசிரியர் பா. விஜய்க்குக் கல்யாணம். பிப்ரவரி மாதம் மூன்றாம் தேதி, அவரது சொந்த ஊரான உட்கோட்டையில் பெரியாண்டவர் கோவிலில் குடும்பப் பாரம்பரிய முறைப்படி திருமணம். ஒன்பதாம் தேதி சென்னையில் வரவேற்பு.

# மாப்பிள்ளை விஜய்!

"என்ன மாப்பிளே! காதல் திருமணம் தானே?"

"ஊகூம். பெற்றோர் நிச்சயித்த திருமணம்தான்!"

"அப்படியா! சினிமாவுல 'லவ்' பாட்டையெல்லாம் தூளா எழுதறீங்க. ஆனா, சொந்த லைஃப்ல, 'லவ்' இல்லையே ஏன்?"

"அப்பாவுக்குப் பட்டு நூல் மில். அம்மா ஸ்கூல் டீச்சர். கிராமத்துப் பின்னணி கொண்ட பெற்றோருக்கு நான் ஒரே பிள்ளை. அவங்களே பார்த்து, என் விருப்பத்தையும் கேட்டு, கல்யாணம் செஞ்சு வைக்கணும் கிறதுதான் அவங்க கனவு. நான் கவிஞன் என்பதற்காக, அவங்க கனவைக் கலைக்கலாமா? கல்யாணத்தில் தொடங்கி, காலத்துக்கும் நிலைக்கும் எங்க காதல்."

"வருங்கால மனைவியைப் பற்றிச் சொல்லுங்களேன்!"

"பெயர் லேனா! பிளஸ் டூ வரை படிச்சிருக்காங்க. சொந்த ஊர்ல கோவில்ல வைச்சு பொண்ணு பார்த்தது. அதன் பிறகு, இரண்டே தடவைதான் ஃபோனில் பேசிக்கிட்டோம். ஒண்ணு என் பிறந்த நாள் அன்னைக்கு. இன்னொண்ணு புத்தாண்டு தினத்தன்று. கல்யாணத்துக்கு அப்புறம்தான் காலம் பூரா பேசிக்கிட்டே இருக்கப் போறமே!"

- எஸ்.சந்திரமௌலி



### அதுமட்டும் ரகசியம் - இந்திரா சௌந்தர்ராஜன்

அனுபவமிக்க எழுத்தாளரின் சரள நடையில் ஒரு மர்ம நாவல். எது மட்டும் ரகசியம் என்று புரிவதற்குள் பரபரப்பை ஏற்படுத்துகிறது. எழுத்துப் பிழைகளைச் சற்று தவிர்த்திருக்கலாம்.

**திருமகள் நிலையம், 16, வெங்கட் நாராயணா சாலை, தி.நகர், சென்னை - 17 விலை ரூ.68/-**




### பவுர்ணமி இருட்டு - சுதா மூர்த்தி

மொழி பெயர்ப்பு - சௌதாமினி வாசுகி.

'துமுலா' என்ற கன்னட நாவலின் தமிழாக்கம். இன்ஃபோசிஸ் ஃபவுண்டேஷன் நிர்வாகி எழுதியது என்பதால், கதை பறந்து பறந்தே செல்கிறது.

**விலை ரூ.30/-**



### கம்பனில் மானுடம் - சிற்பி பாலசுப்பிரமணியம்

கம்பராமாயணத்தில் இராமனின் மானுடப் பண்புகளாகக் கம்பன் காட்டுபவைகளைக் குறித்து, கம்பன் விழா 2002-ல் ஆற்றிய சொற்பொழிவின் நூல் வடிவம்.

**விலை ரூ.35/-**

**இரு நூல்களும் வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17**




# புக் பேங்க்

### சாதாரண மனிதன் - நரசய்யா

மணிக்கொடி எழுத்தாளரான சிட்டியின் வாழ்க்கை வரலாறு. சற்று மிகைப்படுத்தப்பட்ட பாராட்டு நூல்.

**கலைஞன் பதிப்பகம், 19, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17 விலை ரூ.80/-**




### மகாத்மா காந்தி படைப்புகள் - 5 தொகுதிகள் - தமிழில் லா.சு. ரங்கராஜன்

சுயசரிதம், தென்னாப்பிரிக்க சத்யாக்கிரகம், உண்மையின் குரல் என மகாத்மா காந்தியின் கட்டுரைகள், கடிதங்கள், அவர் ஆற்றிய உரைகளிலிருந்து ஐந்து தலைப்புகளில் தொகுக்கப்பட்டவை. காந்தி துவக்கி வைத்த நவஜீவன் டிரஸ்ட்டால் வெளியிடப்பட்ட ஆங்கில நூல்களின் தமிழாக்கம்.

**நவஜீவன் பிரசுராலயம், அகமதாபாத் - 380 014. விலை ரூ.200/- (5 தொகுதிகள்)**



— விஸ்வக்

# Tulips Beauty Parlour and Training Institute



A/c (Regd.)

## Beautician Course
(Basic & Advance 3 Months Course)

**More than 60 types of Facials : Includes**
(Indian & Imported)
Mini Facial
Full Facial
Aroma Method
Shanaz Method
Pigmentation
Open Pores
Deep pores
Waxpack
Galvanic
Gold
Silver
Pearl
Thermo Mask
ThermoHerb
Enzyme Facial
Isometric Face Lift
Veg. Peel
Oxygenating Facial
Seaweed Facial
Vitamin C Facial
Fruit Peel
Parffin Mask
Alcaline Wash
Alcaline Peel etc.

**Hair**
Dandruff Treatment
Moisture Treatment
Lies Treatment
Hair falling Treatment
Hot oil Massage

Dye Application
Henna Application
10 Types of perming
Hair Colouring
Hair Streaking
Hair Straightening etc.

**Threading :** Self & Others

**Waxing :** Hot, Cold, Strip

**Haircuts :** 30

5 types of pedicure & Manicure

20 types of Makeups
200 Hair styles
Ear Piercing
Warts Removing
Bindi Design
Nail Art
Eye brow Implantation
Business Motivation
Electrotheropy
(About Beauty Machineries)
Herbal Preparation

**Mehendhi :**
Basic and Advance
Body Massage
Electrolysis
Weight Reduction
Yoga
Aerobics
& Etc.,

## TULIPS ARTS AND CRAFTS CENTRE

* Tailoring * Hand Embroidery * More than 25 types of Paintings * Frame work * Doll making * Flower Making * Cookery * Fashion Choreography * Classical Music * Veena * Portrait Accommodation will be provided for outstation Students. For working women and students classes are being conducted on Sundays also.

Mrs. **SASIKALA VIJAYA SAGAR**
New No.210 (Old No.168), Peters Road, Royapettah,
Chennai - 14 (Opp. to New College) Tel : 28524674, 7105849
Website : www.tulipsgroups.com





# National Insurance Company Limited

Chennai Regional Office,
P.O.Box, No.5639, Chennai - 600 006.
Tel No. : 28525331 / 28525441 / 28525378

REQUIRES

## INSURANCE AGENTS

National Insurance Company Limited is in search of active and dynamic persons of either sex, including bank VRS personnel and housewives having excellent contacts, with a flair for marketing to act as Non-Life insurance Agents for its business operations in Chennai City as well as in and around Vellore and Pondicherry.

**ELIGIBILITY AND OTHER TERMS & CONDITIONS :**

Minimum Age : 18 years. Minimum Educational Qualifications : 12th Standard Pass or equivalent Examination conducted by a recognised Board or institution (for applicants residing in areas with population less than 5000 as per the last census, the required qualification will be 10th Standard)

The appointment is solely on commission basis. The selected candidates can earn remuneration by way of attractive commissions on the amount of premium procured.

The applications must be brief giving only Name, Address, Telephone / Fax Number, Date or Birth, Education Qualification, Sales experience and details of insurance Training undergone, if any.

Short listed candidate will have to undergo 100 hours training, pass written test / interview to qualify for obtaining licence to become agent as per IRDA (Insurance Regulatory and Development Authority) Regulations.

Eligible candidates may please send their applications superscribing the envelope with word AGENTS to the address given above.

**24 Hour Helpline : 9622-002222**

அய்யா ... தெரியாதய்யா.. லேடீஸ் ஹாஸ்டலுக்குள் அனுமதியில்லாமல் நுழைவது இவ்வளவு பெரிய கண்டனத்துக்குரிய விஷயம் ஆகும் என்று...

மேற்கு மாம்பலம் துரைசாமி சுரங்கப்பாதை அருகிலுள்ள அனந்தாஸ் ரமா பெண்கள் விடுதிக்குள் நுழைந்ததுதான் தாமதம்.

'காச் மூச்' என்று ஒரே துரத்தல்!

''பர்மிஷன் இல்லாம எப்படி நீங்க லேடீஸ் ஹாஸ்டலுக்குள்ளே வரலாம். 'கோ பேக்...' என்று ஒரு பெண் நம்மை அதட்ட, அதற்குள் அறைக்குள் இருந்த சில பெண்கள் படார்... படாரென்று கதவுகளை மட்டும் திறந்து எட்டிப் பார்த்தார்கள். ''வாட்ச்மேன்... வாட்ச்மேன்'' சிலர் கோரஸாகக் குரல் கொடுக்க, வாட்ச்மேன் ஓடி வருவதற்கு முன்பே; பரபரப்போடு வார்டன் விஜயலட்சுமி வந்தார்.

நம்மை அறிமுகம் செய்துகொண்டு விஷயத்தைச் சொன்னவுடன் ''பத்திரிகையா!'' என்று கொஞ்சம் ரிலாக்ஸானார்.

இரண்டு வருடங்களாக நடத்தி வரும் இந்த லேடீஸ் ஹாஸ்டலில் சுமார் நாற்பது பேர் தங்கி இருக்கிறார்கள், என்று பேச்சைத் தொடங்கினார் வார்டன் கம் உரிமையாளர் விஜயலட்சுமி.

''பதினேழு வருடங்களாக ராமகிருஷ்ணா ஆஸ்ரமத்தில் 'பாய்ஸ் ஹாஸ்டலில் வார்டனாக இருந்த அனுபவம்தான்,

# ''எங்க

• டயட்டில் இருக்காங்களாம்

> ''சல்மான்கான், ஷாருக்கான், அஜீத், விஜய் ப்ளோ அப், போஸ்டர்களைக் காணவில்லையே!''

• எவ்ளோ சிடுக்கு... அசக்காதேடீ...

• சலவைத் துறை

# குடும்பம் ரொம்பப் பெரிசு”



• காலேஜுக்கு புக்ஸ் மலை!

இந்த லேடீஸ் ஹாஸ்டலை நடத்த முடிகிறது'' என்றார்.

'டீ.வி.யில் ஐக்கிய மாணவர்கள், ரூமுக்குள் புத்தகம் படித்துக் கொண்டிருந்தவர்கள், என்று அங்கிருந்தவர்களை மொட்டை மாடியில் ஆஜர்ப்படுத்தி விட்டார் 'சிப்காட்' சாந்தி. (சிப்காட்டில் வேலை!) ''நான்தான் மோஸ்ட் சீனியர்பர்ஸன்'' என்று பேச ஆரம்பித்தவரை... ''போதும் தாயே போதும்.. நீயே பேசி போர் அடிக்க வச்சுடாதே!'' என்று விசாலாட்சி தடுத்து நிறுத்தினார். புதுக்கோட்டையிலிருந்து வந்து, இங்கு புரோகிராம் என்ஜினியராக வேலை செய்கிறார்.

எங்கோ பிறந்தவர்கள் அக்கா, தங்கை போல, இழைந்தும், குழைந்தும் உறவாடுவது மனத்தை நெகிழச் செய்தது.

திடீரென்று ஏதோ ஞாபகம் வந்தது போல சுற்றிச் சுற்றிப் பார்த்தும், அந்த மாதிரி ஒரு காட்சி கிடைக்கவில்லை. கொஞ்சம் தயங்கியவாறே சினிமாவில் காட்டுவது போல, குறிப்பாக, 'மல...மல..' பாடலில் காட்டுவது போல எல்லாம் 'லேடீஸ் ஹாஸ்டல் இருக்காதா?'' என்ற நம் கேள்விக்குக் கொஞ்சம் கோபமாகி விட்டார் அட்வகேட் சாந்தி.

''ஒரு நிமிஷம் எங்க ரூம்களுக்கு வந்து பாருங்க ப்ளீஸ்'' என்று ரூம்களைக் காட்டினார். உண்மையாகவே சினிமாவில் காட்டும் ரூம்களுக்கும், இந்த அறைக்கும் சம்பந்தமே இல்லை. எம்மதமும் சம்மதம் என்பது போல் எல்லா, சாமிப் படங்களையும் மாட்டி வைத்திருந்தார்கள்.

''சல்மான்கான், ஷாருக்கான், அஜீத்,





• விஜயலட்சுமி

சென்னையில் இருக்கின்றனவாம். ஆனால் இங்கு மட்டும் மாதம் 2000 ரூபாய்க்கு தங்குற இடம், காலையிலே ஆறு மணிக்கெல்லாம் டீ, அப்புறம் ஏழரைக்கு டிபன் தயார். உப்புமா, பொங்கல், சப்பாத்தி என்று தினம் ஒரு ஐட்டம். மதியம் புளிசாதம், தக்காளி சாதம், சாம்பார் சாதம்... ராத்திரி கண்டிப்பாக 'ஃபுல்மீல்ஸ்'.



• அரட்டைக் கச்சேரி

விஜய் ப்ளோ அப், போஸ்டர்களைக் காணவில்லையே, அவங்களை உங்க யாருக்குமே பிடிக்காதா?" என்றோம்.

"பிடிக்காது என்பதெல்லாம் கிடையாது. நாங்க இங்கே ப்ராஜெக்ட் செய்வதற்காக வந்திருக்கோம். காலையிலே எட்டு மணிக்கு கிளம்பினா, ஈவினிங் ஏழு மணிக்குத்தான் வருவோம். கொஞ்ச நேரம் படிப்பு, சாப்பாடு, அரட்டை, தூக்கம், மறுபடியும் காலையில் வழக்கமா கிளம்பிடுவோம். சண்டே ஒரு நாள்கூட ரெஸ்ட் கிடையாது. துணி துவைக்கிறது, சொந்தக்காரங்க வீட்டுக்குப் போறதுன்னு அன்னைக்கு அப்படிப் போயிடும். இதுல சல்மான் கான், ஷாருக்கானுக்கு என்று ஏது நேரம்?" பொரிந்து தள்ளினார் காயத்ரி.

'பேயிங் கெஸ்ட்' என்ற பெயரில் வசதியே செய்து தராமல் வாடகையை மட்டும் அதிகம் வாங்கும் அமைப்புகள் திடீரென்று வந்து ஹாஸ்டலில் ரூம் கேட்டால், உடனடியாகத் தருவதில்லையாம். படிப்பு, வேலை செய்யும் கம்பெனி போன்றவற்றை விசாரித்துவிட்டு, பெற்றோர் அல்லது உடன் வேலை செய்பவர்களை அழைத்து வந்தால்தான், அறை கிடைக்கும். அறையைக் காலி செய்யும்போது அட்வான்ஸ் மூவாயிரத்தைத் திருப்பித் தந்து விடுவார்கள்.

"மாதா மாதம் வாடகையைக் கொடுங்கள் என்று யாரையும் தொந்தரவு செய்ய மாட்டோம். சிலர் 'இந்த மாதத்திலிருந்து வேலை இல்லை' என்று சொல்வார்கள். நாங்களும் அதற்குத் தகுந்தாற் போல் அட்ஜஸ்ட் செய்து கொள்வோம். லேடீஸ் ஹாஸ்டலில் பெரும்பாலும் யாரும் வாடகை தராமல் ஏமாற்றவே மாட்டார்கள். ஆனால், 'ஆண்கள்' ஹாஸ்டலில் சிலர் மூன்று மாதம் வரை வாடகை தராமல் தங்கிவிட்டு, அறையைக் காலி செய்து கொண்டு போகும்போது, வாடகை கேட்டால் உன் மேலே 'கேஸ்' போடுவேன் என்று மிரட்டி விட்டுச் செல்வார்கள்" என்று தம் சொந்த அனுபவத்தைச் சொல்கிறார் வார்டன் விஜயலட்சுமி.

"இரண்டு பெண்கள் ஒன்றாக இருந்தாலே சண்டை வரும் என்பார்கள். நான்கு பேர் ஒன்றாகத் தங்கியிருக்கும் இடம் எப்படி இருக்கும்?" என்று கொடியில்

துணி காய வைத்துக் கொண்டிருந்த டாக்டர் புவனேஸ்வரியைக் கேட்டோம்.

''இங்கே சண்டை என்ற பேச்சுக்கே இடமில்லீங்க. தமிழ், தெலுங்கு, இந்தி பேசறவங்க தங்கி இருப்பதால், டீ.வி கூட ஆளுக்கு ஒரு மணி நேரம், விரும்பின சேனலைப் பார்க்கணும்னு எங்களுக்குள்ளே ஒரு சின்ன வாய் மொழி உடன்படிக்கை இருக்குன்னா பார்த்துக்கங்க'' என்றார்.

''அதுக்காக சண்டையே போடாம இருந்ததும் இல்லை. ஹாஸ்டலுக்கு ஒரேயொரு காமன்ஃபோன் தான் இருக்கு. இதுல இன்கமிங் கால் மட்டும்தான் பேச முடியும். ராத்திரி ஊரிலிருந்து ஃபோன் வரும்னு எல்லோரும் ஃபோன் பக்கத்துல வெயிட் பண்ணிக்கிட்டு இருப்போம். சிலர் சட்டுன்னு பேசிட்டு வைக்க மாட்டாங்க. அந்த சமயம் காத்திருக்கறவங்க டென்ஷனாகி, சண்டை போடுவாங்க. இப்போ அதுக்கு வாய்ப்பில்லை. பெரும்பாலும் எல்லோர் கையிலேயும் செல்போன் இருக்கு'' என்று சண்டை அனுபவத்தைச் சுவாரஸ்யமாகச் சொன்னார் சுமிதா. வாழ்க ஆர்.பி.ஜி. வளர்க நோக்கியா!



* பக்தி பரவசமூட்டும்...

ரயில் சிநேகம் மாதிரி, ஹாஸ்டலை விட்டுப் போன பிறகு இவர்கள் நட்பு மறந்து போவதில்லையாம். திருமணமாகி, வந்து போன ராணி என்பவருக்கு, நேற்றுத்தான் குழந்தை பிறந்ததாம். இந்த மகிழ்ச்சியான செய்தியை ஃபோன் மூலம் ஹாஸ்டல் தோழிகளுக்குச் சொல்லியுள்ளார் ராணி. எல்லோரும் சேர்ந்து குழந்தைக்கு 'கிப்ட்' அனுப்பி வைக்க, பெரிய திட்டம் போட்டுப் பேசிக் கொண்டிருந்தனர்.

''தினமும் ராத்திரி பன்னிரண்டு மணி வரைக்கும் பேசிக் கொண்டிருப்போம். சிலருக்கு மனசு சரியில்லை என்றால், மதுரை சிஸ்டர்ஸ் இந்து வைப் பாடச் சொல்லி கேட்போம். சாப்பாடு பரிமாறுவது, தலைவாரி விடுவது, 'மார்கழி மாதம்' வாசலில் கோலம் போடுவது, பொங்கல் பானை வைப்பது, தீபாவளிக்குப் பட்டாசு வெடிப்பது, கிறிஸ்துமஸ்க்கு கேக் வெட்டுவது என்று, இதை எங்கள் குடும்பம் போலவே உணர்கிறோம்'' என்கிறார்கள்.

படிப்பு முடிந்து ஊருக்குப் போகிறவர்கள், 'கடவுளே சென்னையிலேயே வேலை கிடைக்க வேண்டும்' என்று வேண்டிக் கொள்வார்களாம். எதுக்கு? ஹாஸ்டலில் தங்கத்தான்!

* ரிமோட் எங்கே போச்சோ?''

- செய்யாறு வி. பாலு

படங்கள்:
'டிஜிட்டல்' சண்முகம்

M.REVATHY M. MUTHULAKSHMI

## PEARLS BEAUTY PARLOUR, INSTITUTE & SLIMMING WORLD



இந்திய அளவிலும் உலக அளவிலும் அழகு கலை நிபுணர்களுக்கான போட்டிகளில் 8 முறை வென்று சென்னைக்கே பெருமை சேர்த்த ஒரே அழகு நிலையம்.

அழகு நிலைய சிகிச்சைகளும் உடல் இளைக்க ஆயுர்வேத மற்றும் எலக்ட்ரானிக் சிகிச்சைகளும் சிறந்த முறையில் செய்யப்படும்.

62/15C, East Kalmandapam Road,
Royapuram, Chennai - 13. Tel : 25981400

Branch : 1059/352, T.H. Road, Old
Washermenpet, Chennai - 21. Tel : 25964546



T.CHOKKARAM

## Monica Beauty Centre

**Wholesale & Retail Cosmetics & Fancy Goods**

***A House of Beauty Parlour Cosmetic & Equipments***

Old 22, New # 43, N.S.C. Bose Road,
S.V. Plaza 1st Floor,
(Opposite Govindaappa St.)
Near Flower Bazar Police Station,
Chennai - 600 079. Tel : 25354526

உங்களுக்காகவே

**அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு நம்பகமான ஒரே கூந்தல் தைலம்**

## குண
## கூந்தல் தைலம்




*உங்கள் கேசம் அடர்த்தியின்றி இருக்கிறதா ?*

- தினசரி குண கூந்தல் தைலத்தை தடவி வர புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்திற்கு தகுந்த முறையில் அனைத்து ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் ஆரோக்கியமாக, அடர்த்தியாக திகழ்ச் செய்கிறது.
- கூந்தல் நீண்டு கருமையாக இருப்பதற்கு உதவும் மெலனின் என்ற பொருளுக்கு அதிக சக்தி அளிக்கிறது.
- கேசம் உதிர்தல், செம்பட்டை நிறம், பித்த நரை, தலை அரிப்பு, பொடுகு மற்றும் சொரிந்தால் செதில் உதிர்தல் ஆகியவற்றை எல்லாம் தடுக்கிறது.
- சித்த மருத்துவ முறைப்படி தயாரிப்பதால் எந்தவித பக்க விளைவுகளையும் ஏற்படுத்தாது.
- பெண்கள் மட்டுமன்றி ஆண்களும் உபயோகிக்கலாம்.



Mfrs:
**Agasthiar Pharmaceuticals**
Post Box No: 588, Salem - 636 005

# சிவகாமியின் சபதம்

## முப்பத்தெட்டாம் அத்தியாயம்

## வாதாபி மார்க்கம்

புலிகேசியின் படை வாதாபியை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது. வாதாபியிலிருந்து கிளம்பியபோது அந்தப் படை எவ்வளவு பெரியதாயிருந்ததோ, அதில் பாதிதான் இப்போது இருந்தது. ஆயினும், இன்னமும் அது பெரும்படைதான்.

ஏறக்குறைய மூன்று இலட்சம் யுத்த வீரர்கள் அந்தப் படையில் இருந்தார்கள். ஏழாயிரம் போர் யானைகளும் இருந்தன.

போகுமிடத்தையெல்லாம் சுடுகாடாகவும் பாலைவனமாகவும் செய்து கொண்டு அப்படை சென்றது. கிராமங்களும் பட்டணங்களும் கொள்ளையடிக்கப்பட்டன. வீடு வாசல்களையும் உடைமைகளையும் காப்பாற்றிக் கொள்ள முயன்ற மக்கள் ஈவிரக்கமின்றிக் கொல்லப்பட்டார்கள். அல்லது அங்கஹீனம் செய்யப் பட்டார்கள். வீடுகளும் குடிசைகளும் வைக்கோற் போர்களும் கொளுத்தி விடப்பட்டன. ஏரிக் கரைகள் வெட்டி விடப்பட்டன.

ஒரு பக்கம் பசியினாலும் இன்னொரு பக்கம் பழி வாங்கும் வெறியினாலும் சளுக்கிய வீரர்கள் இம்மாதிரி பயங்கர அட்டூழியங்களைச் செய்தார்கள். தாங்கள் செய்வது போதாதென்று யானைகளையும் அவர்கள் அந்த நாச வேலையில் ஏவி விட்டார்கள்.

பசியும் வெறியும் கொண்ட போர் யானைகள் தாம் போகும் வழியிலிருந்த பசுஞ் சோலைகளை அழித்தன. பயிர் செய்த வயல்களைத் துவைத்தன. வீட்டுக் கூரையைப் பிடுங்கி வீசின. வைக்கோற் போர்களை இடறி எறிந்தன.

**அமரர் கல்கி**

இதனாலெல்லாம் சளுக்கர் படை திரும்பிப் போன பாதை வெகு சுலபமாகத் தெரிந்து கொள்ளும்படி இருந்தது. அந்தப் பாதையானது ஒரு பெரிய பயங்கரமான சூறைக் காற்றுப் போன வழியைப் போலக் காணப்பட்டது. அந்தப் பாதையில் பின்னர் வெகு காலம் அழுகுரலும் புலம்பல் ஒலியும் கேட்டுக் கொண்டிருந்தன. பருந்துகளும் கழுகுகளும் வட்டமிட்டுக் கொண்டிருந்தன. நரிகள் பட்டப் பகலிலேயே ஊளையிட்டுக் கொண்டிருந்தன.

வாதாபி நோக்கிச் சென்ற சளுக்கர் படையுடன் கூடச் சிவகாமியும் போய்க் கொண்டிருந்தாள்.

அவளைப் பல்லக்கிலே வைத்துத் தூக்கிக் கொண்டு போனார்கள். ஆனால் பல்லக்குச் சுமப்பவர்கள் தன்னைத் தூக்கிக் கொண்டு போவதாகவே சிவகாமிக்குத் தோன்றவில்லை. தடுக்க முடியாத ஏதோ ஒரு விதியானது தன்னை எங்கேயோ அழைத்துப் போய்க் கொண்டிருப்பதாகவே அவளுக்குத் தோன்றியது.

சளுக்கர்களால் சிறைப் பிடிக்கப்பட்ட உடனே அவள் மனத்தில் தோன்றியிருந்த பீதியும், தன்னுடைய கதி என்ன ஆகப் போகிறதோ என்ற கவலையும் இப்போது மறைந்து விட்டன.

அத்தகைய நிலைமையில் ஓர் அபலைப் பெண்ணிடம் சற்றும் எதிர்பார்க்க முடியாத மனோ தைரியம் அவளுக்கு ஏற்பட்டிருந்தது. மனோ தைரியம் மட்டும் அல்ல; தன்னுடைய சக்தியைக் குறித்த ஒரு பெருமித உணர்ச்சியும் உண்டாகியிருந்தது!

சிறைப் பிடிக்கப்பட்ட பெண்களை விடுதலை செய்யும்படி புலிகேசியிடம் விண்ணப்பம் செய்து வெற்றி பெற்றதிலிருந்து அந்தப் பெருமித உணர்ச்சி சிவகாமிக்கு உண்டாயிற்று. இதோ ஒரு சக்கரவர்த்தி - பல்லவ சாம்ராஜ்யத்தைக் காட்டிலும் எவ்வளவோ பெரிய சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி - அபலையாகிய தன்னுடைய வேண்டுகோளுக்கு உடனே இணங்கினார்! இது மட்டுமல்ல; இன்னும் தான் என்ன சொன்னாலும் அந்தப்படி அவர் செய்ய ஆயத்தமாயிருந்தார் என்பதை அவருடைய முகபாவத்திலிருந்து சிவகாமி தெரிந்து கொண்டாள்.

அதே சமயத்தில் சிவகாமி இன்னோர் இரகசியத்தையும் கண்டு கொண்டிருந்தாள். (அல்லது கண்டு கொண்டிருந்ததாக எண்ணினாள்) அன்று காஞ்சியில் கூடியிருந்த சபையிலே புலிகேசியின் முகத்தைப் பார்த்தபோது ஏதோ ஒரு விளங்காத மர்மம் அதில் இருப்பதாக அவளுக்குத் தோன்றியதல்லவா? அது என்ன என்பது இப்போது அவளுக்குத் தெரிந்து விட்டது. புத்த பிக்ஷு நாகநந்தியின் முகத்துக்கும் புலிகேசியின் முகத்துக்கும் இருந்த ஒற்றுமைதான் அது. ஆஹா! தெரிந்தது மர்மம்! புலிகேசி சக்கரவர்த்தியும் புத்தபிக்ஷுவும் ஒருவரே தான்!

மகேந்திர பல்லவர் மாறுவேடம் பூண்டு தேச யாத்திரை செய்வதுண்டு என்பதைச் சிவகாமி அறிந்திருந்தாளாகையால் புலிகேசியும் அப்படி மாறுவேடம் பூணுவது இயற்கையென்று அவளுக்குத் தோன்றியது. புத்த பிக்ஷு தன்னுடைய நாட்டியக் கலையில் காட்டிய ஆர்வமெல்லாம் அவளுக்கு நினைவு வந்தது. ஒருவேளை தனக்காகவே புலிகேசி காஞ்சி மீது படையெடுத்து வந்திருக்கலாம் என்றும் அவள் எண்ணமிட்டாள்.

தன்னிடம் இவ்வளவு சக்தி இருக்கிறது என்பது சிவகாமிக்கே வியப்பையும் பிரமிப்பையும் அளித்தது. கொடுமைக்கும் குரூரத்துக்கும் பெயர் போன வாதாபிப் புலிகேசி தன்னுடைய விருப்

பத்தின்படி நடக்கச் சித்தமாயிருக்கிறார்! இந்த நினைவு அடிக்கடி தோன்றிச் சிவகாமியின் பெருமிதத்தை வளர்த்து வந்தது. அன்றியும், தன்னுடைய பாதுகாப்பைப் பற்றி அவளுக்குக் கவலை ஏற்படாமலும் செய்தது. தன்னுடைய விருப்பத்திற்கு விரோதமாக ஒன்றும் நடவாதென்றும், தனக்குத் தீங்கு எதுவும் நேராதென்றும் அவள் தைரியம் கொண்டாள்.



ந்த நாட்களில் சிவகாமி மாமல்லரைப் பற்றி நினைத்தாளா? நல்ல கேள்வி! அவளுடைய எல்லாவித மானஸிக அநுபவங்களுக்கும் அடிப்படையில் மாமல்லரின் நினைவு இருந்து கொண்டு தானிருந்தது. ஆனால் அந்த நினைவு அவ்வப்போது விசித்திர ரூபங்களைக் கொண்டது. அன்பு ஆத்திரமாயிற்று; ஆத்திரம் துயரம் ஆயிற்று; துயரம் துவேஷத்தையும், பழி வாங்கும் எண்ணத்தையும் உண்டாக்கிற்று.

பல்லவ சாம்ராஜ்யத்தை ஆளப் பிறந்த மாமல்லரால், பல்லவ நாட்டுப் பெண்களைச் சிறைப் பிடிக்கப்படாமல் காப்பாற்ற முடியவில்லை. இந்த ஏழைச் சிற்பியின் மகளால் அவர்களை விடுதலை செய்ய முடிந்தது! இந்தச் செய்தியைச் சத்ருக்னன் அவரிடம் சொல்லும்போது அவர் என்ன நினைப்பார்? மகிழ்ச்சியடைவாரா? கோபங் கொள்வாரா? அவர் என்ன நினைத்தால் இங்கு யாருக்கு என்ன? கேவலம் சிற்பியின் மகள் என்றுதானே என்னை அவர் அலட்சியம் செய்து விட்டிருந்தார்? அவருடைய தந்தை என்னை அவமானப் படுத்தியதையெல்லாம் பார்த்துக் கொண்டு சும்மா இருந்தாரல்லவா? உண்மையிலேயே என்னிடம் அன்பு இருந்தால், என்னைக் காட்டிலும் இராஜ்யத்தைப் பெரியதாய் எண்ணியிருப்பாரா? மகேந்திர பல்லவரிடம் தம் எண்ணத்தைத் தைரியமாகச் சொல்லி என்னை மணந்து கொண்டிருக்க மாட்டாரா? அப்படிச் செய்திருந்தால் இந்த விபரீதமெல்லாம் நேர்ந்திருக்குமா?

நல்லது; அவருக்கு ஒரு பாடம் கற்பிக்கிறேன். இதோ ஒரு மகா சக்கரவர்த்தி - பல்லவ இராஜ்யத்தைக் காட்டிலும் மூன்று மடங்கு பெரிய ராஜ்யம் உடையவர் - நான், காலால் இட்ட பணியைத் தலையால் செய்வதற்குக் காத்திருக்கிறார்! மாமல்லர் வந்து இதைப் பார்க்கட்டும்! இப்படிப்பட்ட மகோன்னத பதவியை நான் எவ்வளவு துச்சமாகக் கருதி அவருடன் வருவதற்குச் சித்தமாயிருக்கிறேன் என்பதையும் நேரிலே தெரிந்து கொள்ளட்டும்!

ஒருவேளை அவர் வராமலே இருந்து விட்டால்! இந்த எண்ணம் தோன்றியதும் சிவகாமியின் உடம்பிலுள்ள இரத்தமெல்லாம் ஒருகணத்தில் சுண்டிப் போய் அவளுடைய தேகம் ஒரு தோல் கூடாக மாறிவிட்டது போன்ற பயங்கர உணர்ச்சி ஏற்பட்டது. அடுத்தகணம் அவள் மீண்டும் தைரியம் பெற்றாள். வராமலிருந்து விடுவாரா? ஒருநாளும் அப்படிச் செய்ய மாட்டார். அவ்வளவு கேவலமான மனுஷர் அல்ல; அவருடைய அன்பும் அவ்வளவு மட்டமானதல்ல. வேலின் மேல் ஆணையிட்டுக் கூறிய வாக்குறுதியை நிறைவேற்றுவதற்காகவேனும் அவர் அவசியம் வருவார்.

''ஒருவேளை அவர் வரவில்லையானால்...'' என்பதாகச் சிவகாமி மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு சிந்தனை செய்தாள். வரவில்லையென்றால், அதற்கு என்ன அர்த்தம்? என்னிடம் அவருக்கு உண்மையில் அன்பு இல்லை. என்னிடம் காதல் கொண்டதாக அவர் சொன்னதெல்லாம் வெறும் நடிப்பு என்றுதான் அர்த்தம். நல்லதாய்ப் போயிற்று! அன்பில்லாதவரைப் பிரிந்து வந்ததற்காக நான் ஏன் வருத்தப்பட வேண்டும்? என் தந்தை எனக்களித்த அற்புதமான நாட்டியக் கலை

இருக்கிறது. விஸ்தாரமான வாதாபி இராஜ்யம் இருக்கிறது. அதற்கு அப்பால் ஹர்ஷவர்த்தனருடைய சாம்ராஜ்யமும் இருக்கிறது. அன்பில்லாத ஒரு மனிதரிடம் பிரேமை வைத்து ஏன் உருகி உருகி அழிய வேண்டும்?

இப்படிச் சிவகாமி எண்ணிய போதே, உண்மையில் அவளுடைய உள்ளம் அந்த அன்பில்லாத மனிதரைக் குறித்து உருகிக் கரைந்து கொண்டிருந்தது. சீச்சி! இது என்ன வீண் பிரமை? அவர் மட்டும் வந்து என்னை அழைத்துப் போகாவிட்டால், அப்புறம் இந்த உலக வாழ்க்கையில் என்ன இருக்கிறது? எதற்காக வாழ வேண்டும்? நாட்டியமாவது, கலையாவது, மண்ணாங்கட்டியாவது?

வீணாக என்னை நானே ஏமாற்றிக் கொள்வதில் என்ன பிரயோஜனம்? சளுக்கரிடம் சிறைப்பட்டு நான் உயிர் வாழ்ந்து கொண்டிருப்பது அவருக்காகத்தான். வழியில் பயங்கர அட்டூழியங்களையெல்லாம் பார்த்துக் கொண்டு நான் வாதாபிக்குப் போவதும் அவருக்காகத்தான். அவர் வந்து இந்தப் பாதகச் சளுக்கர்களைப் பழி வாங்கி என்னை மீட்டுக் கொண்டு போவார் என்ற நம்பிக்கையினால்தான். அவருடைய அன்புக்காகவே நான் உயிர் வாழ்கிறேன். அவருடைய கௌரவத்தைப் பாதுகாக்கவே நான் வாதாபிக்குப் போகிறேன்.

அவர் என்னை மறந்துவிட்டால்? நல்லது, அப்புறம் இந்த உயிரை மாய்த்துக் கொள்ள எத்தனை நேரம் ஆகிவிடும்?

சிவகாமி நாட்டியமாடும்போது சில பாடல்களுக்கு அபிநயம் பிடிப்பதற்கு மின்னல் மின்னும் நேரத்தில் உணர்ச்சிகளையும் முகபாவங்களையும் மாற்றிக் கொள்ள வேண்டியதாயிருக்கும். பார்ப்பவர்கள் அம் மாறுதல்களைத் தொடர்ந்து கவனிப்பதுகூட அசாத்தியமாகிவிடும். இப்போது சிவகாமியின் உள்ளமானது உண்மையாகவே அத்தகைய மின்னல் வேக உணர்ச்சி மாறுதல்களை அநுபவித்து வந்தது.

பல்லவ நாட்டுப் பெண்களை விடுதலை செய்த பிறகு, வடபெண்ணை நதிக்கரை போய்ச் சேரும் வரையில் புலிகேசி சக்கரவர்த்தி அவள் இருந்த பக்கம் வரவேயில்லை. புலிகேசியின் புத்த பிக்ஷு வேஷத்தைப் பற்றிய இரகசியம் தெரிந்து விடப் போகிறதே என்னும் தயக்கத்தினாலேதான் அவர் தன்னிடம் வரவில்லையென்று சிவகாமி கருதினாள். அது தனக்குத் தெரிந்திருப்பதாக இந்தப் பிரயாணத்தின்போது காட்டிக் கொள்ளக்கூடாது என்றும் அவள் தீர்மானித்துக் கொண்டாள்.

வடபெண்ணை நதிக்கு அக்கரையில், முன்னதாக வந்த வாதாபி சைனியத்தின் பெரும்பகுதி தங்கியிருந்தது. அந்தச் சைனியத்தோடு பின்னால் புலிகேசியோடு வந்த சிறு சைனியம் ஒன்று சேர்ந்த அன்று இரவு, சிவகாமி ஓர் அதிசயமான கனவு கண்டாள். ஆனால் அது கனவா நனவா என்பது அவளுக்கு வெகுநாள் வரையில் சந்தேகமாயிருந்து வந்தது. கனவாயிருந்தாலும் நனவாயிருந்தாலும், அதில் கண்டதும் கேட்டதும் அவளுடைய உள்ளத்தில் புதிய பல சந்தேகங்களையும் கவலைகளையும் கிளப்பி விடுவதற்கு ஏதுவாயிருந்தன.

வாதாபி சைனியம் தண்டு இறங்கியிருந்த இடத்துக்குச் சற்றுத் தூரத்தில் சிவகாமியின் பல்லக்கு இறக்கப்பட்டது. பிரதேசம் இயற்கை அழகு பொருந்தியதாயும் நிசப்தமாயும் இருந்தது. பூரண சந்திரன் வானத்திலும் பூமியிலும் பால் நிலவைப் பொழிந்து கொண்டிருந்தான். இனிய இளங்காற்று வீசிக் கொண்டிருந்தது.

நீண்ட பிரயாணத்தினால் பெரிதும் களைப்புற்றிருந்த சிவகாமி ஒரு மரத்தினடியில் படுத்துக் கொண்டாள். அவளுடைய கண்கள் தாமே மூடிக் கொண்டன. சிறிது நேரத்துக்கெல்லாம் நித்திரா தேவியின் வயப்பட்டு அயர்ந்த

தூக்கத்தில் ஆழ்ந்தாள்.

ஏதோ பேச்சுக் குரல் கேட்டு உறக்கம் சிறிது கலைந்தது. ஆனால் கண்ணிமைகள் திறக்க மறுத்தன. எனினும், யார் பேசுகிறார்கள் என்று தெரிந்து கொள்ளும் ஆவலும் அதிகமாயிருந்தது. பெரிதும் முயன்று கண்ணிமைகளைச் சிறிது திறந்தாள். எதிரே நிலவு வெளிச்சத்தில் அவள் சற்றும் எதிர்பாராத அதிசயமான காட்சி ஒன்று தென்பட்டது.

புலிகேசிச் சக்கரவர்த்தியும் புத்த பிக்ஷுவும் அருகருகே நின்று கொண்டிருந்தார்கள். ஒரே உயரம்; ஒரே உருவம்; முகத்தின் தோற்றம், மூக்கின் அமைப்பு, கண், புருவம் எல்லாம் ஒன்றே. உடைகளில் மட்டுந்தான் வித்தியாசம். ஒருவர் சக்கரவர்த்திக்குரிய கிரீடம் முதலியவை தரித்திருந்தார். இன்னொருவர் மொட்டைத் தலையுடனும் காவி வஸ்திரத்துடனும் விளங்கினார்.

இதைப் பார்த்த சிவகாமி தன் மனத்திற்குள், 'ஆ! இதென்ன! புலிகேசியும் புத்த பிக்ஷுவும் ஒருவர்தானே? இங்கே தனித்தனியாய் நிற்கிறார்களே? ஆகையால், இது உண்மையான காட்சியல்ல. நான் கனவு காண்கிறோம். கனவிலேதான் இந்த மாதிரி பிரமை நமக்கு ஏற்பட்டிருக்கிறது!' என்று எண்ணமிட்டாள். மறுபடியும் கண்ணிமைகள் மூடிக் கொண்டன.

கண்கள் மூடிக் கொண்ட போதிலும் செவிகள் திறந்திருந்தன. பின்வரும் சம்பாஷணை அவளுடைய காதில் விழுந்தது:

"அண்ணா! நீ சொன்னது இந்தப் பெண்தானே?"

"இவள்தான்!"

"இவள்தான் சிவகாமியா?"

"ஆம், இவள்தான் சிவகாமி!"

"எனக்கு நீ எழுதிய ஓலையில் 'காஞ்சி சுந்தரியை நீ எடுத்துக் கொள்; சிவகாமியை எனக்குக் கொடுத்து விடு' என்று எழுதியிருந்தாயே; அது இந்தப் பெண்ணைப் பற்றித்தானே?"

"ஆமாம், தம்பி, ஆமாம்!"

"அப்படி, இவளிடம் நீ என்ன அழகைக் கண்டாயோ, அதுதான் எனக்குத் தெரியவில்லை. இவளைவிட எத்தனையோ சுந்தரமான பெண்களை நம் வாதாபியிலே நான் பார்த்திருக்கிறேன்."

"இவள் நாட்டியமாடும்போது பார்க்க வேண்டும்; அப்போது வேறு விதமாகச் சொல்லுவாய்!"

"அதையும் மகேந்திர பல்லவனுடைய சபையில் பார்த்தேனே! அப்படியொன்றும் அதிசயமாக எனக்குத் தெரியவில்லை."

"உனக்குத் தெரிந்திராது. கலைக் கண்களோடு பார்ப்பவர்களுக்குத் தெரியும். அஜந்தா சித்திரங்களைப் பார்த்து, 'இது என்ன அதிசயம்?' என்று சொன்னவனல்லவா நீ?"

"போகட்டும்; நமது வம்சத்துக்கு நீ ஒருவன், கலைக் கண் உடையவன் இருக்கிறாயே, அதுவே போதும். இந்தத் தென்னாட்டுப் படையெடுப்பில் நமக்கு எல்லாம் அபஜயமாய் முடிந்தது. ஏதோ உன்னுடைய மன விருப்பமாவது நிறைவேறியதே, அந்த வரையில் எனக்கும் திருப்திதான்."

"தம்பி! இவளை நீ சர்வ ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். நான் திரும்பி வரும் வரையில் இவளுக்கு ஒரு குறைவும் வைக்கக் கூடாது."

"இதென்ன இப்படிக் கவலைப் படுகிறாய், அண்ணா?"

"நான் இவளுக்காகக் கவலைப் படவில்லை. இவளிடமிருக்கும் கலைக்காகத்தான் கவலைப் படுகிறேன். அந்தத் தெய்வக் கலைக்கு யாதொரு குறைவும் வரக் கூடாதே என்று கவலைப்படுகிறேன்."

"நல்ல கலை! நல்ல கவலை! என்னைக் கேட்டால், என்ன சொல்வேன் தெரியுமா? மகேந்திர பல்லவனிடம் சொன்னதைத்தான் உனக்கும் சொல்வேன்!"

"மகேந்திர பல்லவனிடம் என்ன சொன்னாய், தம்பி!"

"இந்த அற்பர்களுக்கு இவ்வளவு மரியாதை என்ன! எங்கள் நாட்டிலேயென்றால் சாட்டையால் அடித்து நடனம் ஆடச் சொல்வோம் என்று கூறினேன்."

"பார்த்தாயா? உன்னை



## அருள்வாக்கு

ஒரே ஒரு சூரியன்தான் உள்ளது; கையிலே கொஞ்சம் ஜலத்தை எடுத்துக் கொண்டு, நல்ல வழுவழுப்பான தரையில் அதைத் தெளித்தால் ஒவ்வொரு முத்து ஜலத்திலும் பிரதிரூபமாக ஒரு சூரியன் தெரிகிறது. அவை எல்லாம் பிரிந்து பிரிந்து காணப்பட்டாலும் அநேக சூரியன்கள் இருப்பதாக ஆகாது. சூரியன் ஒன்றுதான். அவ்வாறே உலகில் காணும் இத்தனை ஜீவராசிகளுக்குள் சிறியதாக மினுமினுக்கிற அறிவொளி அனைத்தும் ஒரே பிரம்மத்தின் பிரதிபலிப்புத்தான். இதைத்தான் ஸ்ரீ ஆதி சங்கராச்சாரியாரவர்கள் ப்ரம்ம ஸூத்திர பாஷ்யத்தில் சொல்லியிருக்கிறார். எல்லாவற்றுக்கும் மூலமாக இருக்கும் அகண்டமான ஒரே சக்தி எதுவோ, அறிவு எதுவோ அந்த எல்லை கடந்த சக்திதான், அறிவுதான், நம்மிடத்தில் ஓர் எல்லைக்குள் பிரிந்து கண்டம் கண்டமாகத் தோன்றுகிறது. அந்த ஒரே வஸ்துதான் வேதத்தின் அந்தத்தில் இருக்கும்படியான தத்(அது) என்பது. 'தத்' என்றால் தூரத்தில் எல்லாவற்றுக்கும் மேலே இருக்கிறதென்று அர்த்தம். நாம் இப்போதிருக்கும் நிலையில் அது தூரத்தில் இருப்பதாகத் தோன்றினாலும் உண்மையில் தூரத்தில் கிட்டத்தில் எல்லாமுமாய் இருப்பது அதுதான். 'அது நீயேதான்' - 'தத்-த்வம்' என்கிறது வேதம்.



**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

நம்பி இவளை எப்படி ஒப்புவித்து விட்டுப் போவது? நான் வேங்கிபுரத்துக்குப் போகவில்லை!"

"இல்லை, அண்ணா, இல்லை! ஏதோ விளையாட்டுக்காகச் சொன்னதை உண்மையாக எடுத்துக் கொள்ளாதே! உன் விருப்பத்துக்கு மாறாக நான் எந்தக் காரியத்திலாவது நடந்து கொண்டிருக்கிறேனா? இவளுடைய மனங்கோணாமல் எல்லா ஏற்பாடுகளும் செய்து வைக்கிறேன். நீ கவலையின்றிப் போய் விட்டு வா!"

இத்துடன் சம்பாஷணை முடிந்ததாகத் தோன்றியது. சிவகாமி மறுபடி நினைவற்ற உலகத்தில் ஆழ்ந்தாள்.

மறுநாள் பொழுது விடிந்து சிவகாமி கண் விழித்து எழுந்தபோது மேலே கூறிய கனவுக் காட்சியும் சம்பாஷணையும் சிறிது சிறிதாக ஞாபகம் வந்தன. அவையெல்லாம் கனவுதானா, ஒரு வேளை உண்மையான நிகழ்ச்சிகளா என்ற சந்தேகமும் அவள் மனத்தில் எழுந்து குழம்பியது. வெகு நேரம் சிந்தித்துக் கனவாகத்தானிருக்க வேண்டுமென்ற முடிவுக்கு வந்தாள்.

அப்படி ஒரேவித உருவமுள்ள இரண்டு பேர் இருக்க முடியாது. இருந்தாலும் ஒருவர் பிக்ஷுவாகவும் ஒருவர் சக்கரவர்த்தியாகவும் இருக்க முடியாது. அவர்கள் தன்னெதிரே வந்து நின்று அவ்விதமெல்லாம் பேசுவது ஒருநாளும் நடந்திருக்க முடியாத காரியம். தன்னுடைய பிரமை கொண்ட மனத்தில் கற்பனையிலேதான் இவையெல்லாம் நிகழ்ந்திருக்க வேண்டும். மூர்க்கப் புலிகேசியிடம் ஒரு பக்கத்தில் கலைப் பற்றும் இருக்கும் அதிசயத்தைக் குறித்துத் தான் அடிக்கடி எண்ணமிட்டதுண்டல்லவா? அது காரணமாகவே ஒரே மாதிரி இரண்டு உருவங்கள் தன்னுடைய கனவிலே தோன்றி அத்தகைய சம்பாஷணையை நடத்தியிருக்க வேண்டும்.

புலிகேசியும் புத்த பிக்ஷுவும் உண்மையில் ஒருவர்தான். இவ்விதம் சிவகாமி தீர்மானம் செய்து கொண்ட போதிலும் மேற்படி கனவு கண்டதன் காரணமாக அவளுடைய உள்ளம் பெரிதும் கலக்கமும் கவலையும் அடைந்திருந்தது.

(தொடரும்)

காசியில் கங்கையில் செய்யும் தீபவழிபாடு மனிதவாழ்வுக்கு மேன்மை அளிக்கக்கூடியது!

# குறைவில்லா அன்னம் பாலிக்கும் அன்னபூரணி க்ஷேத்ரமான காசியில் மகா சிவராத்திரியன்று கங்கைக்கு தீபமேற்றி அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளாசியுடன் புனித க்ஷேத்ரமான காசியில் அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்கேற்கலாம்...

## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்டின் நான்காம் ஆண்டில் தொடர்ந்து அன்னதான சேவை!

பேரன்புடையீர்! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ அன்னபூரணி அன்னை தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.

பிரபஞ்சம் முழுமைக்கும் உணவுபடைக்கும் தாயாக விளங்கும் ஸ்ரீ அன்னபூரணி மாதா கோலுவீற்றிருக்கும் காசியில் மாதாமாதம் அமாவாசை அன்று கங்கைக்கு தீபமேற்றி, அன்னதானம் செய்யப்படுகிறது என்பதை தெரிவித்துக் கொள்கிறோம். ஆன்மீக அன்பர்கள் அனைவராலும் காசியில் கங்கைக்கு தீபமேற்றி அன்னதானமிட முடியும் என்ற இறைசிந்தனையோடு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்" என்ற தனி அமைப்பை ஏற்படுத்தியுள்ளோம். இந்த அன்னதான இறைபணிக்கு தங்களால் இயன்ற நன்கொடையை வழங்கி "இறையருளால் காசியில் ஏழைகளுக்கும், அடியார்களுக்கும் அன்னம் அளிப்பதில் நாமும் ஓரளவேனும் பங்குகொண்டோம்" என்ற ஆத்ம திருப்தியை அடைய இது ஒரு சிறந்த வாய்ப்பாகும்.

தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

ரூ.500/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.

ரூ.1000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடையை அனுப்புவோர், திருமண நாள், பிறந்தநாள் மற்றும் திதி நாள் மேலும் தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதைத் தெரிவித்தால் அதன்படி தாங்கள் விரும்பும் மாதத்தில் அமாவாசை அன்று காசியில் அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ.1000, ரூ.5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு கங்கா தீர்த்தத்துடன் கூடிய காசி சொம்பும் காசியில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் விக்கிரகமும் ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு மாதமும் அமாவாசை அன்று காசியில் அன்னதானமும், கங்கையில்தீபமேற்றும் பணியும் செய்து பத்து வருடங்கள் "ஆன்மீகம்" மாத இதழ் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்போது சந்நிதியின் முகவரிக்கும் மாற்றம் செய்து தருகிறோம். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெறவேண்டும் என்ற எண்ணத்துடன் ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பகவத் கீதை புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

காசி, கயா, பிரயாகை (திரிவேணி சங்கமம்) ஆகிய இம்மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் புண்ணிய காரியங்கள், பித்ரு காரியங்கள், பிண்டம் போடுதல், தர்மங்கள், ச்ராத்தம், திவசம், தர்ப்பணம் போன்றவற்றை அவரவர் விருப்பப்படி அன்னதானக் கைங்கர்ய அன்பர்களுக்கு செய்து தரப்படும்.

குடும்பத்தில் தாய் தந்தையர்கள், மூதாதையர்களுக்கு பிண்டப்பிரதானம் மற்றும் தர்ப்பணம் காசியிலும், கயாவிலும், பிரயாகையிலும் நேரில் சென்று செய்ய முடியாதவர்களுக்காக, சாஸ்திரிகளைக் கொண்டு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்" மூலம் செய்யப்படுகிறது.

பித்ருக்களுக்கு பிண்டப்பிரதானம் செய்ய காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று பித்ரு க்ஷேத்ரங்களுக்கும் தனித்தனியாக ரூபாய் 1000/- அனுப்பும்போது யாருக்கு ச்ராத்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர், திதி மற்றும் கோத்ரம் போன்ற விபரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம். பிண்ட பிரதானத்திற்காக ரூ.5000/= அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக தொடர்ந்து வருடத்திற்கு ஒருமுறை பத்து ஆண்டுகளுக்கு மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் எந்த இடத்தில் யாருக்கு ச்ராத்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவர்களுக்கு ச்ராத்தம் செய்யப்படும். பித்ரு காரியங்களுக்குப் பணம் அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று இடங்களிலும் உள்ள தெய்வீக ஆலமரமான 'அக்ஷய வடத்தின்' படமும், கயாவில் உள்ள விஷ்ணு பாதத்தின் படமும் அனுப்பி வைக்கப்படும். நம் வீட்டில் செய்யும் ச்ராத்தத்திற்கு தாய், தந்தையர், உறவினர்கள் மட்டுமே பங்குகொள்ள வாய்ப்புண்டு. மூன்று பித்ரு க்ஷேத்ரங்களில் ஏதாவது ஒரு அக்ஷய வடத்தில் (ஆலமரம்) பிண்டப்பிரதானம் செய்தால் ஏழு தலைமுறைக்கு பித்ருக்கள் கூட்டமே முக்தி அடைவதுடன் பித்ரு தோஷங்களும் நிவர்த்தியாகும்.

அன்னதான சேவையிலும், கங்கைக்கு தீபமேற்றும் பணியிலும் ஈடுபட விரும்பும் ஆன்மீக அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque/D.D/M.O மூலம் (Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4) என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். கலியுகத்தில் அன்னதான சமுதாயப்பணி மகத்தான தெய்வீகப்பணியாக காசி திருத்தலத்தில் தழைத்திட உதவுமாறு அன்புகூர்ந்து வேண்டுகிறோம்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி வரிவிலக்கு உண்டு.



*Cheque/D.D./M.O* அனுப்ப வேண்டிய முகவரி:


## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)

68, Nadu Street, (Opp: Sri Kapaleeswarar Temple), Mylapore, Chennai - 600 004.

Tel : 24959302 Fax: (044) 7102308 E-mail : siva siva@vsnl.net




காசியில் அன்னதானமிடுவது வாழ்வில் பெரும் புண்ணியத்தைக் கொடுக்கும்!



வரவேற்கிறோம்!
ஸ்ரீரங்கம் எஸ். கௌரிலக்ஷ்மி

✉ சேவை மனம் கொண்ட இளைஞன் கபிலன் வைரமுத்துவின் சந்திப்பு இனித்தது.... "கவிஞர்கள் யதார்த்தம் என்ற பெயரில் அவநம்பிக்கையை உண்டாக்கக் கூடாது"– என்கிற அவரது கருத்துகள் கவிஞர்களுக்கு ஓர் வழிகாட்டி.
திருவண்ணாமலை,
என்.எஸ்.மணிமாறன்

✉ கலைஞரின் ஹிந்து மத எதிர்ப்பு பற்றிய வாசகரின் கேள்விக்கு, கலைஞர் போன்ற மூத்த தலைவர்கள் மதப் பிரச்னையில் எப்படி நாசுக்காக நடந்து கொள்ள வேண்டும் என்பதை சுட்டிக் காட்டிய தராசுவின் விளக்கம் படு நேர்த்தி!
திருச்சி - 20, இ. முகம்மது ஹுஸைன்

✉ டான்சி நில விவகாரத்தில் ஜெ. காட்டிய பன்முகங்களை அப்பட்டமாக தோலுரித்துக் காட்டியுள்ளது இந்த வார கார்ட்டூன்!
பெரியகுளம், ஆர். வேணுகோபால்

✉ சேரனின் தீர்ப்புக்கு ஒரு பெரிய்ய 'ஹேய்ய்ய்' என்று மூன்றாவது தடவை உற்சாகமாகக் கூவ வேண்டியதுதான்.
சென்னை – 73, கே.வி. ராமன்

✉ 'இளமை ஸ்பெஷல் ஜோடியாக கைகோத்து வந்தது சரிதான்!'
சென்னை – 40,
நெல்லை ஆ.கணபதி

✉ 'அக்பர் பாதையா? ஔரங்கசீப் பாதையா?' தலையங்கம் வெகு நேர்த்தியாக எழுதப்பட்டிருந்தது. அரசியலில் எதற்கெடுத்தாலும் 'ஜால்ரா' அடிப்பவர்களுக்கு மத்தியில் தனது மனத்தில் தோன்றிய விஷயங்களை துணிச்சலாக சுட்டிக்காட்டி, பிரதமரை நோக்கி கேள்வி எழுப்பியிருக்கும் ப.சிதம்பரம் அவர்கள் பாராட்டத்தக்கவர்.
திருவாரூர்,
ஆர்.ராமசுப்ரமணி

✉ ஜில்லு – ஜானு தூள் கிளப்பியது போல் குல்லு – மல்லுவும் புகழ் பெறப் போவது நிச்சயம். அட்வான்ஸ் வாழ்த்துக்களுடன்

# கை கோத்த இளமை!



✉ சந்தோஷிக்கு மின்சாரப் புன்னகையாள் பட்டமளித்து சரியாக கௌரவித்தமைக்காக இந்தாருங்கள் இரண்டு கப் ஐஸ்கிரீம்கள்!
தோட்டப்பாளையம்,
கே.வெங்கடேசன்

✉ சுசி கணேசனின் கவிதைத் தரமான படத்திற்கு அருமையான விமரிசனம் வெளியிட்ட தங்களைப் பாராட்ட 'விரும்புகிறேன்'.
அயன்புரம்,
த. சத்தியநாராயணன்

# நீக்குங்க சினிமாவை!

**க**ட்டத்தில் உள்ள சினிமாக்களை (அதாவது சி, னி, மா ஆகிய எழுத்துக்களை) நீக்கிவிட்டால், கீழே உள்ள குறிப்புகள் உணர்த்தும் திரைப்படங்களை சுலபமாகவே கண்டுபிடிக்க முடியும். முயற்சி செய்யுங்களேன் (அவை சமீபத்தில் வெளியானவை என்பது ஒரு க்ளூ. அவற்றில் நடித்த சிலரின் படங்கள் இந்தப் பக்கத்தில் இருக்கின்றன என்பது கூடுதல் க்ளூ).

1. ஆசைப்படுகிறேன்
2. பேட்ஸ்மேனின் இலக்கு
3. ராமர் அல்லது அர்ஜுனனை இப்படி அழைப்பது நியாயமல்ல
4. அருணாச்சல மகான் அழைக்கப்படுகிறார்
5. பிரபல நர்சரி ரைம் ஒன்றின் முதல் வார்த்தை
6. பசு பொழியும் அமுதமா?
7. தலைசிறந்த ஹோட்டல், சாக்லெட்டும் கூட
8. ஔவை சண்முகத்தின் பிரபல சகோதரர்.

- ஜி.எஸ்.எஸ்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| சி | வி | ல் | ல | ன் | னி | வி |
| னி | மா | ர | ம | ணா | சி | ரு |
| னி | ன் | மா | சி | ர் | ப | ம் |
| பா | னி | சி | டா | மா | க | பு |
| பா | சி | ஸ் | லா | னி | வ | கி |
| மா | வ் | சி | னி | பா | தி | றே |
| பை | சி | மா | மா | னி | சி | ன் |

விடைகள் :
1. விரும்புகிறேன் 2. ரன் 3. 'வில்'லன்
4. ரமணா 5. பாபா 6. பாலா
7. பைவ் ஸ்டார் 8. பகவதி

# பாலியல் தொழிலுக்குப் பாதுகாப்பா?



• ஹரிஹரன்

• சங்க நிர்வாகிகள்

சமீபத்தில் புருவங்களை உயர்த்திய பத்திரிகைச் செய்தி ஒன்று. பாலியல் பெண் தொழிலாளர்கள் தங்கள் நலனுக்காக சங்கம் ஒன்று அமைத்திருக்கிறார்கள் என்ற செய்திதான் அது. ஒழுக்கக் கேடானது மட்டுமல்ல, சட்ட விரோதமான தொழில் செய்பவர்களுக்கு ஒரு சங்கமா? எதற்காக அமைத்தார்கள்? அவர்களது நோக்கம்தான் என்ன? 'பாலியல் தொழிலாளர்கள் குழு' என்பது சங்கத்தின் பெயர். செயலாளர் கலைவாணியை நம் கேள்விக் கொக்கிகளால் மடக்கினோம்.

''எதற்காக சங்கம்? உங்கள் தொழிலை முறையான தொழிலாக அங்கீகரிக்க போராடப் போகிறீர்களா?''

''ஐய்யய்யோ... எங்க நோக்கம் அதுவல்ல. பாலியல் தொழில் செய்யும் தொழிலிலிருந்து பெண்களை மீட்டெடுப்பதுதான் எங்கள் நோக்கம்.'' என்று அவசரமாக மறுத்தார் கலைவாணி. அந்த அடிப்படையில் தான் சங்கம் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. பாலியல் தொழிலில் ஈடுபட்டிருந்த கலைவாணி, பேபி, சாந்தி, விஜயா ஆகியோர் அத்தொழிலிலிருந்து மீண்டு வந்தவர்கள். இன்று இந்திய சமுதாய நல நிறுவனம் என்ற தொண்டு அமைப்போடு இணைந்து, எய்ட்ஸ் விழிப்புணர்வு, பாதுகாப்பான, இயற்கை உணவு ஆகியவற்றை வலியுறுத்தி தெரு நாடகம், இசை நிகழ்ச்சிகள் நடத்தி வருகிறார்கள்.

"இந்தத் தொழிலில் ஈடுபடும் பெண்கள் பல வகைகளில் பாதிக்கப்படுகின்றனர். ரவுடிகள், போலீஸ் போன்றோரால் நிறைய பாதிப்புகள் உண்டு. பெரும்பாலான சமயங்களில் விபசாரத் தடைச் சட்டத்தின் அடிப்படையில் வழக்குப் போடாமல், போதைப் பொருள் வைத்திருந்ததாகவும், சாராயம் விற்றதாகவும், தெருவில் நின்று விபச்சாரத்திற்கு அழைத்ததாகவும், பொய் வழக்குப் போடுகிறார்கள். இதை நாங்கள் தட்டிக் கேட்போம். அடிப்படையான வேலைத் திட்டம், தொழிலில் ஈடுபட்டுள்ள பெண்களைத் திருத்துவது, புதிதாகத் தொழில் செய்ய வருபவரைத் தடுப்பது ஆகியவைதான்."

இப்படிப்பட்ட சங்கம் துவங்குவதற்கு உறுதுணையாக இருந்த இந்திய சமுதாய நல நிறுவனத்தைச் சேர்ந்த ஹரிஹரன் "நாங்கள் எடுத்த ஒரு புள்ளி விவரப்படி. சென்னையில் சுமார் ஏழாயிரம் பாலியல் பெண் தொழிலாளர்கள் இருக்கிறார்கள். ஆனால் கணக்குக்குள் வராமல் இன்னமும் சில ஆயிரம் இருக்கலாம். இதில் ஆறுதலான அம்சம் என்னவென்றால், பாலியல் பெண்களின் குழந்தைகளில் சுமார் எண்பத்தியேழு சதம் அந்தத் தொழிலை வெறுக்கிறார்கள். படித்து முடித்து நல்ல பாதையில் செல்ல ஆசைப்படுகிறார்கள்" என்கிறார்.

- ப்ரியன்

படங்கள் : ராஜன்

# Your Children Can Score Very High Marks In the Exams.

The students who score 60 - 75% can score 80 - 85% and those who score 80 - 85% can score 90-95% through our result oriented therapy.

**IBT**

**Flat No.F3, I Floor,**
**242, Rangarajapuram Main Road,**
**Kodambakkam, Chennai - 600 024.**
**Ph : (044) 2372 8984**

Note : This therapy is meant only for the students studying Standard 10th and above.

**WORKING HRS: 9 AM - 6 PM**
**SUNDAY HOLIDAY**

**Make payment after satisfying with your child's progress.**



*The fragrances that sing the Glory of the Divinity*




**MAHENDRA PERFUMERY WORKS**
Ragavendra Colony,
No. 72/2, 5th Main Road, Chamarajpet,
Bangalore-560 018. Phone : 6602089, 6603729

"Prayer and praise are the first means of growth."
-Swami Vivekananda.



# நவக்கிரக ஆன்மீக பயணம்

**நாள்** : சென்னையிலிருந்து 7.2.2003
இரவு கிளம்பி 10.2.2003 காலை திரும்புதல்

**2 தினங்கள் ரூபாய் 900/-**

**வசதி** : இரயிலில் படுக்கை வசதியுடன் சென்று வருதல்.
இரவு தங்க வசதியான அறைகள், திருத்தலங்களை சுற்றி பார்க்க வேன் வசதி உட்பட. மற்றைய தேதிகளில் சிறு சிறு குழுக்களாகவும் அழைத்துச் செல்லப்படும். (சாப்பாடு நீங்கலாக)

**சென்னையில் தொடர்பு போன் : 24720885**

**VISVAM TOURS & TRAVELS**
**VISVAM GUEST HOUSE**
33, திருமஞ்சன வீதி, திருவிழந்தூர்,
மயிலாடுதுறை - 609 001.
போன் : 04364 - 227228



**betco**
PRODUCTS




# Champaka

**INCENSE STICKS**

**OUR OTHER PRODUCTS**

GULAB, ANNAMAYYA, PEARL, SUNDARAKANDA
JANMABHOOMI, RAINBOW, BETCO SPECIAL AGARBATHES

## BETCO ENTERPRISES

Raghavendra Colony, 72/2, 5th Main Road,
Chamarajpet, Bangalore - 560 018
Phone : 6603729, 6602089

**APPLY FOR DISTRICT WISE STOCKIST SHIP**

அமெரிக்காவின் அந்தச் சாலையில் அப்போது யாருமே இருக்கவில்லை. வெறிச்சோடிக் கிடந்தது. 'ஃப்ரீ வே' என்று அழைக்கப்படும் சிக்னல்களே இல்லாத அந்த நெடுஞ்சாலை. என் சிந்தனைகள் எங்கோ ஓட, அதைத் துரத்திப் பிடிக்கும் வேகத்தில் என் வண்டியும் அதைத் தொடர்ந்து ஓடியிருக்க வேண்டும். கவனிக்கவேயில்லை, சட்டென்று என் காருக்குப் பின்னால் போலீஸ் வண்டியின் சிவப்பு விளக்கு அணைந்து அணைந்து எரிந்த போது தான் பக்கென்று ஆகி விட்டது. பிடிபட்டு விட்டோம்!

மனசுக்குள் சட்டென்று திகில் ஒன்று பரவ, காரின் வேகம் காட்டியைப் பார்த்தேன். அது மணிக்குத் தொண்ணூறு மைல் என்றது. மெதுவாக பிரேக்கை அழுத்தி சாலையின் வலது ஓரமாய் வண்டியை நிறுத்தினேன். வண்டி ஓட்டும் போது எதையும் யோசிக்காமல் இருந்திருக்க வேண்டும். இல்லையேல் குறைந்த பட்சம், வேகத்தை ஒரே நிலையில் நிறுத்தும் 'குரூஸ் கண்ட்ரோல்' - ஆவது உபயோகித்திருக்க வேண்டும். நேரம் கடந்து கவலைப் பட்டேன்.



பின்னால் வந்த காவல்துறை வாகனத்திலிருந்து உடலை கட்டுக் கோப்பாக வைத்திருந்த காவலர் ஒருவர் இறங்கினார். இங்கே காவலர்களுக்கு நீல நிற உடை. இடுப்பில் அமைதியாக உட்கார்ந்திருந்தது கைத்துப்பாக்கி ஒன்று. யாரை வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் இவர்கள் சுடலாம். அதற்காக இருமிக் கொண்டே ஒருவர் கட்டளை அனுப்ப வேண்டியது இல்லை. நம்ம ஊரில்தான் லத்தியையும், துப்பாக்கியையும் போலீஸார் அடிக்க மட்டுமே உபயோகிக்கிறார்கள். இங்கே காவலர்களைப் பார்த்தாலே மனசுக்குள் ஒரு பயம்தான்.

ஒருமுறை சிகாகோவில் ஓர் இந்தியனை அதிக வேகம் காரணமாக நிறுத்தியிருக்கிறார்கள். அவர் தன்னுடைய லைசென்ஸை காரின் டாஷ்போர்ட்டில் வைத்திருக்கிறார். காவலர் அருகே வந்ததும் லைசென்சை எடுத்துக் காட்டுவதற்காக அந்த டாஷ் போர்டை இவர் திறக்க, காவலருக்கு இவன் என்னவோ கைத்துப்பாக்கியைத்தான் எடுக்கப் போகிறானோ என்ற பயம். எதையும் யோசிக்கவில்லை. வினாடிக்கும் குறைவான நேரத்தில் காவலர் சுட, அதே இடத்தில் இளைஞர் இறந்து போயிருக்கிறார். இந்தக் கதைகளை எல்லாம் கேட்டபின் நான் எங்கே நகர்வது?

சொல்ல மறந்து விட்டேன். இந்த ஊரில் காவலர் ஒரு காரை நிறுத்துகிறார் என்றால், நாம் காரை விட்டுக் கீழே இறங்கி விடக் கூடாது. காருக்குள்ளே கையை ஸ்டியரிங் மீது வைத்துவிட்டு அமைதியாக உட்கார்ந்திருக்க வேண்டும். இதே நிலை நம்மூரில் என்றால் "என்னடா பெரிய முதலமைச்சரா நீ? இறங்க மாட்டியோ கீழ?" என்று வசை விழும். ஒரு ஊரிலிருந்து இன்னொரு ஊருக்கு வரும்போது எப்படி எல்லாம் மாற வேண்டியிருக்கிறது? சின்னச் சின்ன விஷயங்கள் எத்தனை கற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது? யோசித்தால் ஆச்சரியமாக இருக்கிறது.

கற்றுக் கொண்டுதான் என்ன பயன்? இன்றைக்கு நான் மாட்டிக் கொண்டு விட்



# இதுவும் வெற்றி!

சேவியர்

டேன். அறுபத்தைந்து மைலுக்குப் பதிலாக நான் வந்ததோ தொண்ணூறு மைல் வேகம். எப்படியும் இருநூற்றைம்பது டாலர், பன்னிரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் தண்டம் தான். யோசித்துக் கொண்டிருந்த போதே காவலர் வந்து காரின் கதவைத் தட்டினார்.

'நீங்கள் இருபத்தைந்து மைல் அதிகமான வேகத்தில் வந்திருக்கிறீர்கள். இருநூற்று இருபது டாலர் கட்ட வேண்டும்', உங்களுக்கு இன்னும் ஒரு மாத கால அவகாசம் தரப்படும். காத்திருங்கள். நான் போய் 'பேப்பர் ஒர்க்' முடித்து விட்டு வருகிறேன்.

சொல்லிவிட்டு என்னுடைய 'சரி' என்ற பதிலுக்குக் கூடக் காத்திராமல் சென்று விட்டார் தம்முடைய காரை நோக்கி.

**நா**ன் இதுவரை பிடிபட்டதே இல்லை. வாரம்தோறும் ஆறு மணி நேரம் பயணித்து என் மனைவியைப் பார்க்க பக்கத்து மாநிலம் செல்வது வழக்கம்தான். இன்று கொஞ்சம் அளவுக்கு அதிகமாக யோசித்து விட்டேன்.

யோசிக்காமல் என்ன செய்வது? கடந்த டிசம்பர் மாதம்தான் எனக்குக் கல்யாணம் முடிந்தது. அமெரிக்க வேலை என்னை

இந்தியாவில் இருந்து அமெரிக்காவுக்குத் துரத்தியது. இந்த துரத்தியது என்னும் வார்த்தை எல்லாம் சும்மாதான். பணம் சம்பாதிக்க வேண்டும் என்னும் மோகம் தான், என்னை அனுப்பியது என்பதுதான் உண்மை. ஆச்சரியப்படும் விதமாக என் மனைவியையும் அவளுடைய கம்பெனியி லிருந்து அமெரிக்காவுக்கு அனுப்பினார்கள், கொஞ்சம் முட்டி மோதிய பிறகு. ஆனால் பக்கத்து மாநிலம். வாரம் ஒருமுறை மட்டுமே நாங்கள் சந்திப்பது வழக்கம். அவள் இங்கே வந்து ஆறு மாதம் ஆகப் போகிறது. எங்கள் அலுவலகக் கிளை ஒன்று அவள் வேலை பார்க்கும் மாநிலத்திலேயே இருக்கிறது. ஆனால் பணி மாற்றம் மட்டும் ஒத்து வரவே இல்லை.

அலுவலகத்தில் ஆள் குறைப்பு. யாரோ வாங்குவார்கள் என்று எதிர்பார்த்து தயாரித்து வைத்த மென்பொருட்களை எல்லாம், கஸ்டமர்கள் வேண்டாம் என்று நிராகரித்து விட்டதில் கம்பெனிக்கு மில்லியன் கணக்கில் நஷ்டம். மொத்தத்தில் நிர்வாகத்தின் திறமையின்மை வேலையாட் களின் மேல் சிலுவையாய் விழுகிறது. நிர்வாகிகள் யாரும் பணி நீக்கம் செய்யப்பட வில்லை. கீழ்மட்டத் தொழிலாளர்கள் மட்டும் பணி நீக்கப்படுவார்களாம். என்ன நியாயமோ தெரியவில்லை. ஓட்டைப் பானையில் நீர் நிற்கவில்லை என்பதால், கிணற்றை மாற்றச் சொல்கிறது நிர்வாகம். சொல்கிறது என்பது கூட சரியான வார்த் தையல்ல. கட்டளை என்பதே சரி.

**வா**சல்களெங்கும் அனுமார் வாலாய் நீண்டு கிடந்தன வதந்திகள். அனைத்து இந்தியர்களும் வேலையை விட்டு அனுப்பப் படுவார்கள். டெஸ்டிங் குழுக்கள் எல்லாம் மூடப்படும், என்றெல்லாம் வதந்திகள். போகிறபோக்கில் நான் கிளப்பி விட்ட ஒரு வதந்தியைக் கூட அடுத்தநாள் நான்கு பேர் என்னிடம் சொன்னார்கள் விஷயம் தெரியுமா... என்று ஆரம்பித்தது. அப்படியா? என்று கேட்டு வைத்தேன். இல்லாவிட்டால் இருக்கிற டென்ஷனில் என்னை எல்லாரு மாய்ச் சேர்ந்து அடித்தாலும் ஆச்சரியப்படு வதற்கு இல்லை.

இப்போது எனக்குப் பணிமாற்றம் கிடைக்காதது பெரிய விஷயமாய்த் தெரி வில்லை. வேலை இருந்தால் போதும் என்றாகிவிட்டது.

> ''எங்க அம்மா இன்னிக்கு ஊர்ல இருந்து வர்றாங்கன்றதுக்காக ரசத்தை இவ்வளவு தண்ணியா வைக்கணுமா, வசந்தா?''
> ''அது ரசம் இல்லீங்க... சாம்பார்!''
> — புளியரை கணேசன்

கிளைகள் இருக்கும்போது, பூக்களுக்கு ஆசைப்படும் மரம், கிளைகள் இல்லையேல் வேராவது இருக்கட்டுமே என்று வருத்தப் படுவது போலத்தான் இருக்கிறது. மனிதனு டைய மனதும், ஒவ்வொன்றாய்த் தேடித் தேடி அலையும், கிடைக்கக் கிடைக்க அடுத்த படிக்குத் தாவும். கிடைத்ததை இழக் கும் தருணம் வரும்போதுதான், இருப்பது கூட போதும் என்று தோன்றும். சாவு சமீபிக்கும் போது தானே உலகம் உன்னத மானதாய் பலருக்குப் புரிகிறது.

ஆட்களின் பட்டியல் இன்று வரும், நாளை வரும் என்று சொல்லிச் சொல்லி ஒரு வாரம் கடத்தி விட்டார்கள். இனி திங்கட்கிழமை வரும் என்கிறார்கள். 'நீங்கள் இந்தக் கம்பெனிக்கு அளித்த பணி மகத் தானது' என்னும் ஒரு பளிங்கு வாசகத்தோடு இரண்டு செக்யூரிட்டி ஆட்கள் வந்து நம்மை அழைத்து வாசல் வரை கொண்டு போய் விடுவார்கள். அதுதான் அமெரிக் காவின் ஆள் குறைப்புப் பணியின் முறை. வேலையில்லை என்று சொல்லிவிட்டால் பணியாளர்கள் கணிப்பொறி வழியாக எந்த தகவல்களையும் அழித்து விடக் கூடாது என்னும் முன்னெச்சரிக்கை காரணமாம். எனக்கென்னவோ அப்படி ஒரு பணி நீக்கம் அவமானமாய்த் தோன்றியது. ''வேலை இல்லை, நாளை முதல் வராதே'' என்றால் சகித்துக் கொள்ளலாம், சும்மா கைதி போல வெளியே பிடித்துத் தள்ளினால் என்ன செய்வது?

சிந்தனையைக் கலைத்தார் 'ஸ்பீடிங் டிக்கெட்' கொண்டு வந்த காவலர், ''உங் களுக்கு இந்த நாள் இனிமையாய் இருக் கட்டும்'' என்று சொல்லிவிட்டு நகர்ந்தார். எல்லாம் இங்கே சம்பிரதாயம்தான். சம்பிரதாய வார்த்தைகள் கேட்டுக் கேட்டு சலித்துவிட்டன. 'நான் உங்களைக் கொல்லப் போகிறேன். ப்ளீஸ்..' என்று சொல்லிவிட்டுத் தான் சுடுவார்கள் போலிருக்கிறது. 'நலம்



நலமறிய ஆவல்', என்று ஆரம்பித்து, பின் திகட்டத் திகட்டச் சுகவீனச் செய்திகளையும் சுமந்து வரும் கடிதம் தான் ஞாபகத்துக்கு வருகிறது. இங்கே காவலர்கள் மாமூல் வாங்கினால் எப்படி இருக்கும்? ஒரு ஐம்பது டாலர் கொடுத்து தப்பித்திருக்கலாம், எனக்குள் இருந்த அந்த கேவலமான மனசு சொன்னது.

**வீ**டு போய்ச் சேர்ந்தபோது இருட்டியிருந்தது. களைப்பில் உட்கார்ந்தபோது திடீரென்று தோன்றியது. நண்பனுக்கு போன் பண்ணி பேசினால் என்ன? அவனும் நான் மாற்றலாகி வர வேண்டிய குழுவில் தான் இருக்கிறான். ஏன் இந்தப் பணி மாற்றம் தடைபட்டது என்றாவது தெரிந்து கொள்ளலாமே!

கூப்பிட்டேன், 'என்னடா? அந்த காலியிடம் இல்லேன்னு சொல்லிட்டாங்க? முதல்ல இரண்டு மாசத்துக்கு முன்னாடி வந்திருக்க வேண்டியது. அப்போ என்னை எடுத்துக்கல, இப்போவும் ஒரு வாரம் இருக்கும்போது வேண்டாம்னு சொல்லிட்டாங்க. சரி இனிமே ஏதாவது வாய்ப்பு வரமாதிரி இருக்கா?' மிச்சம் மீதி இருந்த நப்பாசை எல்லாம் பொறுக்கி எடுத்துக் கேட்டேன்.

"இல்லடா... இனிமே சான்ஸே இல்லை..."

''என்னடா இப்படி பட்டுன்னு சொல்லிட்டே - ஆச்சரியமாய்க் கேட்டேன்."

"ஏன்னா? எங்க டீமையே மூடிட்டாங்க! ஆள் குறைப்பை இன்னிக்கு இங்கே நடத்தியிருக்காங்க. எனக்கும் வேலை போய்டுச்சு. நான் இன்னும் ஒரு வாரத்துல கிளம்பியாகணும். உனக்கு அதிர்ஷ்டம்டா மச்சி, இல்லேன்னா நீ பணிமாற்றம் ஆகி இங்கே வந்திருப்பே. அப்போ உன் வேலையும் போயிருக்கும்."

'சாரி டா மச்சி' என்று வாயிலிருந்து விழுந்த வார்த்தையை அவன் பொருட்படுத்தியதாகவே தெரியவில்லை. தொடர்ந்து பேசினான்.

"நான் இங்கேயே வாழணும்ன்னு வரல மச்சி, கொஞ்ச நாள் இருந்தாச்சு, இனிமே போக வேண்டியதுதான். எப்பவுமே நாம ரொம்ப எதிர்பார்க்கக் கூடாது. அப்படியே நம்மள ஆண்டவன் கிட்டே விட்டுடணும். அவன் கிட்டே ஜெபம் பண்ணும் போது கூட "எனக்கு எது நல்லதுன்னு உமக்குத் தோணுதோ அதைத் தாரும்"ன்னு தான் நான் கேட்பேன். ஸோ, இந்த வேலை போனது அவரோட விருப்பம்தான். உனக்குப் பணி மாற்றம் கிடைக்காதது கூட அவரோட விருப்பம் தான். வாழ்க்கை எப்படி வருதோ அப்படியே எடுத்துக்கணும் மச்சி..."

அவன் பேசிக் கொண்டே போனான், வேலை போனவன் அவன். நான் ஆறுதல் சொல்லியிருக்க வேண்டும். ஆனால் இப்போது அவன் சொல்கிறான், எனக்கு ஆறுதல். ஆச்சரியம்தான். இப்படியே எல்லாரும் இருந்துவிட்டால் உலகில் மனம் உடைவு, தற்கொலை இதெல்லாம் இருக்காது என்று தோன்றியது. கொஞ்சம் குற்ற உணர்வும், மனசுக்கு மிகத் தெளிவான ஒரு பதிலும் கிடைத்தது போலத் தோன்றியது எனக்கு.

"ஆமாம்டா, சில நேரம் தோல்விகள் கூட வெற்றிகள் தான் இல்லையா" என்றேன்.

"ஆமா... ஆமா... நீ கூட ஒரு கவிதையில சொல்லி இருந்தியே, ஒரு சூதாட்டத் தோல்வி ஒரு இதிகாசத்தைப் பிறக்க வைத்தது. ஒரு சிலுவை மரச் சாவு ஒரு புது மதத்தைப் பிறக்க வைத்ததுங்கற கருத்துல... தோல்விகள் எல்லாம் தோல்விகள் இல்லேன்னு ரொம்ப நாள் கழிச்சு பார்த்தா புரியும். எனக்கு ஒரு காதல் தோல்வி கூட வந்தது. அப்போ அது மிகப் பெரிய தோல்வியா தெரிஞ்சுது. இப்போ அன்பான மனைவி, ஒரு அழகான குழந்தைன்னு ஆனதுக்கு அப்புறம், அந்த தோல்வி தோல்வியல்லன்னு தோணுது. காலம்தான் சிறந்த களிம்பு! ஒத்துக்கறியா இல்லையா?'' என்றான்.

''ஒத்துக்கறேண்டா... நம்பிக்கையில்லேன்னா பாரேன். நான் இதை ஒரு கதையாகவே எழுதப் போறேன்'' என்று சொல்லிவிட்டு ஃபோனை வைத்தேன். ○

ஆட்டோ கிளம்பியது.

குழந்தையோடு வாசலருகே வந்தாள் அஞ்சலி. சுந்தர் தான் நின்றிருந்தான். அந்த மங்கலான இருட்டிலும் அவன் இறுக்கமாயிருப்பது தெரிந்தது.

"ஸாரிப்பா..." என்றாள் கெஞ்சலாய்.

சுந்தரிடமிருந்து எந்த சலனமுமில்லை.

"ரொம்ப நேரம் காக்க வச்சிட்டேனா.. பாரதிக்கு முடியலியேங்கிற பதற்றத்தில கிளம்புனேனா... அதான்... சாவியக் கூட பக்கத்து வீட்ல கொடுக்க மறந்துட்டேன்... ப்ளீஸ்... தப்பா நெனச்சுக்காதிங்க..!"

இலேசாய் ஆமோதிப்பது போல் தலையசைத்தான்.

குழந்தையை அவன் கையில் கொடுத்து விட்டு, சாவியை எடுக்கக் குனிந்தவள்... சட்டென நிமிர்ந்து அந்த இருட்டைத் தனக்கான சாதகமாக்கிக் கொண்டு, செல்லமாய் அவன் கன்னத்தில் ஒரு முத்தமிட்டாள்.

சந்தோஷத்தால் இருவர் முகமும் மலர்ந்தது.

நட்சத்திரமொன்று மெல்ல நழுவி.. தரையிறங்கியது.



# யாரிடம் சொல்வேனடி தோழி!

அ.வெண்ணிலா

ஆட்டோ வாசலருகே வந்து நின்றதும்... பதற்றமாகி பக்கத்தில் ஓடி வந்தான் சுந்தர்.

குழந்தையோடு கீழிறங்கினாள் அஞ்சலி.

"என்னப்பா... என்னாச்சு..?" என்றான்.

"பாரதிக்குக் காய்ச்சல் வந்துருச்சு மறுபடியும்.." அவள் சொல்வதைக் கேட்டுக் கொண்டே, பணத்தை எடுத்து ஆட்டோக் காரரிடம் கொடுத்துவிட்டு, பாரதியை வாங்கிக் கொண்டான்.

"இப்பத்தான் நானும் வந்தேன். அஞ்சு நிமிஷம் தான் ஆச்சு. என்னடா, வீடு பூட்டி யிருக்கேன்னு ரொம்ப குழம்பிப் போயிட் டேன். ஸாரிப்பா... உனக்குத்தான் ரொம்பக் கஷ்டம்.." சுந்தரின் குரல் இளகியிருந்தது.

அஞ்சலி எதுவும் பேசவில்லை.

"காலையில நா வேற கோபமா பேசிட் டுப் போயிட்டேன். ஸாரி.. வெரி ஸாரி.." சொல்லிக் கொண்டே குழந்தையோடு சேர்த்தே அவளது இரு கைகளையும் இறுக்க மாய் அணைத்தான்.

பின்னிய கைகள் வழி இருவருக்குள்ளும் இளஞ்சூடு மெல்லப் பரவியது.

உதிர்ந்த நட்சத்திரம் மறுபடியும் மேலெ ழுந்து, வானில் ஒட்டிக் கொண்டது.

ஆட்டோ ரிவர்ஸில் வந்து, இரும்பி... அவர்களைக் கடந்து சென்றது.

இருவரும் மௌனமாய் நின்றிருந்தார்கள்.

இலை அசைவதா, கிளை அசைவதா, முதலில் யார் அசைவது என்கிற போட்டி யில் காற்றும் உறைந்து போயிருந்தது.

மரம் போல் நின்றிருந்தார்கள்.

கீழிறங்கி வந்து தன்னை சமாதானப் படுத்துவாள் என்று எதிர்பார்த்த அவனுக் குள்ளும், ஓடி வந்து குழந்தையை வாங்கிக் கொண்டு தன்னை ஆறுதல் படுத்துவான், என்று எதிர்நோக்கிய அவளுக்குள்ளும் ஓடிய காட்சிகள் மெல்ல கலங்கிக், கலங்கி பிம்பம் தொலைத்தன.

கை கடுத்தது. தோளிலேயே தூங்கி விட்டிருந்தான் பாரதி.

'ச்சே.. என்ன மனுசன்..? குழந்தையை ஒரு நிமிசம் வாங்கினா என்ன..'

'என்ன மனுஷி இவ...? ஒரு நிமிசம் குழந்தையப் பிடிங்க'ன்னு கொடுத்தா என்ன... கர்வம்!'

இருவருக்குள்ளும் எண்ணங்கள் ஊடாட, நிமிடங்கள் கரைந்தன.

பையை அவனிடம் நீட்டினாள். வாங் கிக் கொண்டான்.

"சாவி பையில இருக்கு!" என்றாள்.

சாவியை எடுத்து, கதவைத் திறந்தான்.

உள்ளே சென்று விளக்கைப் போட்டான். இருள் தன் இருப்பைத் தொலைத்தது.

குழந்தையோடு உள்ளே நுழைந்தவள், தொட்டில் துணியைப் பிடித்து இழுத்து, உதறிவிட்டு... குழந்தையைப் படுக்க வைத்தாள்.

அடுப்பைப் பற்ற வைத்து, வெந்நீர் வைத்தாள். இரும்பி உள் அறையைப் பார்த்தாள். சுந்தர் பேண்ட்டிலிருந்து லுங்கிக்கு மாறிக் கொண்டிருந்தான்.

'அழுத்தத்தைப் பாரு... குழந்தைக்கு என்ன பண்ணுதுன்னு கூட கேட்க மனசு வருதாப் பாரு!' முணுமுணுத்துக் கொண்டு, அடுப்பை அணைத்து, வெந்நீரை ஆற்றத்

தொடங்கினாள்.

குழந்தையருகில் வந்தான் சுந்தர். தொட்டுப் பார்த்தான். உடம்பு சில்லிட்டிருந்தது.

'பாரதியும் நல்லாத்தான் இருக்கான். சாவியக் கூட பக்கத்து வீட்ல கொடுக்காம, எங்க போயிட்டு வர்றா... சொல்ல மனசு வருதா... திமிரு..!'

புத்தகமொன்றை கையிலெடுத்துக் கொண்டு திண்ணைக்கு வந்தான்.

'அவ்வளவுதான். புத்தகத்தை கையிலெடுத்துட்டு உக்காந்தாச்சு. இனிமே வாய் திறந்து ஒருவார்த்தை கேட்க மாட்டான். ஏன் இப்படி இருக்கான்.!

வெந்நீர் ஆறிய போதும், மனசு மட்டும் ஆறவேயில்லை அஞ்சலிக்கு.

'நேத்து குமரேசன் வரும்போதும் முகத்தை உம்முனு வச்சுக்கிட்டு இருந்தா, இன்னிக்கும் இப்படி...? என்னதான் ஆவுமோ இவளுக்கு!'

வாசிக்க விரித்த புத்தகத்தில் மனம் ஒட்டவில்லை. புத்தகத்தை மூடிவிட்டு, மறுபடியும் உள் அறைக்குள் வந்தான் சுந்தர்.

மாத்திரைகளைப் பொடி செய்து, குழந்தையைத் தூக்கி மடியில் போட்டுக் கொண்டாள் அஞ்சலி.

முழித்துக் கொண்டு, நெளிந்தான் பாரதி.

"கொஞ்சம் மருந்து குடிச்சுடுடா செல்லம்... ஜுரம் விட்டுப் போச்சுல்ல... ஆ... ஆ.. காமி... ஆ..!"

பாலாடையில் மாத்திரையைக் கலக்கி, மெதுவாகக் குழந்தைக்குப் புகட்டினாள்.

முகத்தைக் கோணிக் கொண்டு, மருந்தை வெளித்துப்பிக் கொண்டே அழத் தொடங்கினான்.

"டேய்.. அழாதடா.. வாந்தி எடுத்திடுவே. ஒழுங்கா மாத்திரையைக் குடிச்சிட்டு, தூங்கிற வழியப் பாரு.!"

வாயில் ஊற்றிய மருந்து உள்ளிறங்கவில்லை. அழுகையும் நிற்கவில்லை.

"குடிச்சிடுடா... குடிச்சிடு..!" இலேசாய்த் தலையை ஆட்டினாள்.

குழந்தைக்குப் புரை ஏறியது.

தலையைத் தட்டினாள். இருமலும் சேர்ந்து கொள்ள.. எச்சிலும், சளியும், மருந்துமாக வாந்தி எடுத்தான்.

"டேய்.. டேய்.. மருந்தை எடுத்திடாதடா.!" சொல்லிக் கொண்டே, தலையை நிமிர்த்தினாள்.

கை, கால், உடம்பெங்கும் அப்பியிருந்தது.

துடைப்பதற்கு அருகில் எதுவுமில்லை. குழந்தையை அப்படியே போட்டுவிட்டு எழுந்து போய், துண்டொன்றை எடுத்து வந்து துடைத்தாள்.

உள் அறையில் உட்கார்ந்து என்னவோ எழுதிக் கொண்டிருந்தான் சுந்தர்.

"இந்த வீட்ல எனக்கு மட்டும் எழுதியிருக்கு, எல்லா வேலையும் நாந்தான் செய்யணும்னு. மத்தவங்களுக்கெல்லாம் அவங்கவங்க வேல தான் பெரிசு. என்ன ஏதுன்னு கேக்கக் கூட ஆளில்லாத வீட்ல நா மட்டும் தனியாளாக் கிடந்து அல்லாட வேண்டியிருக்கு..!" சத்தமாய்ச் சொல்லிக் கொண்டே, குழந்தையின் சட்டையைக் கழற்றினாள். ஈரமாகியிருந்தது.

பீரோவைத் திறந்து, வேறொரு சட்டையைப் போட்டு விட்டாள்.

அழுதான் பாரதி.

"இப்ப என்னத்துக்கு அழறே...? அதான் கொடுத்த மருந்து மொத்தத்தையும் வாந்தி எடுத்திட்டே. இப்ப எதுக்காக மறுபடி அழறே.. கம்முனு தூங்கு..!"

தொட்டிலில் போட்டு ஆட்டினாள். அழுகை நிற்கவில்லை. சாயந்தரம் குழந்தையைத் தூக்கிக் கொண்டு ஆஸ்பத்திரிக்குப் போய் வந்ததிலிருந்து ஒரு நிமிடம் உட்காரக் கூட நேரமில்லை. கால் 'விண்' என்றிருந்தது. குழந்தையை வேறு தூக்கி வச்சு, தூக்கி வச்சு... கையிரண்டும் கடுகடுத்தது.

மனசுக்குள் எரிச்சல் தீ மூள...

"பேசாமத் தூங்கு. உதை படுவே...!" என்றாள் அழுகிற குழந்தையைப் பார்த்து.

கேட்பதாயில்லை. அழுகை தொடர்ந்தது.

"அப்பனை மாதிரியே திமிறப் பாரு..!"

பொறுக்கமாட்டாமல் தொட்டிலோடு சேர்த்து, தொடையில் ஒரு அடி கொடுத்தாள்.

குழந்தை வீறிட்டழத் தொடங்கியது.

உள் அறையை விட்டு, வேகமாய் எழுந்து வந்தான்.

"கொஞ்சமாச்சும் அறிவு வேணும்... உடம்பு முடியாத குழந்தையைப் போட்டு அடிக்கிறா..!"

தொட்டிலை விலக்கி, குழந்தையைத் தூக்கிக் கொண்டு அறைக்குள் நுழைந்து கதவைச் சாத்திக் கொண்டான்.

"கும்பகோணம், தர்மாவரம், காஞ்சீபுரம்னு தான் கேள்விப்பட்டிருக்கேன். அந்த புவனா என்னமோ குற்றாலம் புடைவைன்னு பெருமையடிச்சுக்கிறாளே?"

"அதுவா, கீழே ஃபால்ஸ் வைச்சு தைச்சிருக்காளாம்!"

- வி.எஸ். சுதர்சனம்

வீட்டின் அமைதி என்னவோ செய்தது சுந்தரை. வழக்கமான நாளென்றால்... இந் நேரம் பாரதியின் ஆட்டத்தையும், பாட்டத்தையும் தூண்டிவிட்டு, இருவருமே ரசித்துக் கொண்டிருப்பார்கள். பதினோரு மணியாகும் தூங்குவதற்கு.

"ஆடு எப்படிடா... கத்தும்...?"

"ம்மே... ம்மே... மே..."

"குதிரை எப்படி ஓடும்.. சொல்லு?"

"டக்... டக்... டக்..."

"எதிர்வீட்டு கௌரி எப்டி அழுவா...?"

கண்களை மூடிக் கொண்டு, முகத்தை சுருக்கி...

"ம்ம்ம்... ம்ம்...ம்..." என்று அழுவான்.

விழுந்து விழுந்து சிரிப்பார்கள். ஒரு நாள் அந்த குழந்தை அழுவதைப் பார்த்து விட்டான். அன்றிலிருந்து எப்போது கேட்டாலும், அதே மாதிரியான முக பாவத்துடன் அழுது காட்டுகின்றான். குழந்தைகள் மனத்தில்தான் சில விஷயங்கள் எவ்வளவு ஆழமாய்ப் பதிந்து போய் விடுகின்றன!

பாரதி தூங்கி விட்டிருந்தான். தன் மேல் போட்டிருந்த காலை எடுத்துக் கீழே வைத்து, போர்வையை எடுத்துப் போர்த்தினான்.

தூக்கம் வரவில்லை.

முதல் நாள் காலையிலிருந்து யோசித்துப் பார்த்தான். இருவரும் சண்டை போட்டதாகவோ, கோபமாய்ப் பேசிக் கொண்டதாகவோ எதுவுமே நடக்கவில்லை.

ஆனாலும், ஒரு மன அழுத்தம் இருவரிடத்தும் உட்கார்ந்து கொண்டு இம்சிக்கிறது.

'ஏன்.. என்னால் ஆட்டோவிலிருந்து அஞ்சலி இறங்கும் பொழுது, ஓடிப் போய் குழந்தையை வாங்க முடியவில்லை? பாவம்... காலையிலிருந்து முடியாத குழந்தையை வைத்துக் கொண்டு எவ்வளவு சிரமப்பட்டிருப்பாள்..!'

சுந்தருக்குப் பசித்தது. மதியம் கேன்டீனில் இரண்டு தயிர் வடை மட்டும்தான் சாப்பிட்டான். பாரதியும், அஞ்சலியும் கூட வெறும் வயிற்றுடன் தானே படுத்திருப்பார்கள்...!

பிரச்னையென்று எதுவுமேயில்லாத பிரச்னை ஒன்று, இருவருக்கும் இடையில் விரிசலாய் விழுந்து கிடக்கிறதே... சுந்தருக்கு தலை வலித்தது.

எழுந்துபோய் தண்ணீர் குடித்தான். அஞ்சலி கட்டிலில் படுக்காமல், கீழே பாய் கூட விரிக்காமல் தரையில் கையை மடக்கி, தலையை வைத்தபடி படுத்திருந்தாள்.

'நாளைக்குக் காலையில் எழுந்ததும், பழையபடியே அவளும் பேசாமல், நானும் பேசாமல்.. அய்யோ... வேண்டாமே!'

பேச்சுக் குரல்கள் ஒலிக்காத வீடு சூன்யமாகி விடுகிறது. அமைதியாக வீடு இருக்கலாம். அதற்காக மனிதப் பேச்சுக் குரலே கேட்காத வீட்டை என்னவென்பது...?

'நாமதான் போய்ப் பேசுவோமே! அவ தான் என்ன தப்புப் பண்ணிட்டா, இல்லே... நான்தான் என்ன தப்பு செஞ்சிட்டேன். தப்பே செஞ்சிருந்தாலும் அவ என்னோட அஞ்சலி தானே..!'

அவளுடன் பேசலாம் என யோசித்த கணத்திலேயே, சட்டென்று மன இறுக்கம் குறைந்து, சந்தோஷம் கூடி விட்டாற் போல் தோன்றியது அவனுக்கு.

'நாமளா அவகிட்ட பேசப் போயி, நாம தான் ஏதோ தப்பு பண்ணிட்டு வந்து, அவ கிட்டெ இறங்கிப் போயி வந்து பேசுறோம்னு அவ நினைச்சுக்கிட்டா...' அய்யோ... இதுல நினைச்சுக்கிறதுக்கு என்னயிருக்கு.. நினைச்சா நினைச்சுக்கட்டுமே. அய்யே... தூங்கிட்டாளோ... எழுப்புனா தொந்தரவாயிருக்குமோ...!'

யோசனைகளோடு அவளருகே உட்கார்ந்தான்.

கண்களை இறுக மூடி, தூங்கிக் கொண்டிருந்தாள். தூங்குகையில் யாரைப் பார்த்தாலும் கோபப்படவே முடியாது தான் போலும்.

அஞ்சலிக்கு நெருக்கமாய் பக்கத்தில் போய், கலைந்து கிடந்த தலைமுடிகளை இலேசாய் வருடியபடியே சரிப்படுத்தினான்.

அவள் கையை எடுத்து, விரல்களோடு சேர்த்துப் பின்னி அழுத்தினான்.

நெற்றியில் முத்தமிட குனிந்தான்.

'டக்'கென விழித்து, அவனையே நேர்ப் பார்வை பார்த்தாள் அஞ்சலி.

(தொடரும்)



# உருளைக் கிழங்கு பேட்டரி!



'பூ நதிகள் புரளும் உன் விழியில்... புரண்டது என் மனசு'... 'மீனோடு தூண்டிலும் இருக்குதடி உன் பார்வையில்'... - எப்படியோ, ஒரு சில்லறைக் கவிதை (!) எழுத வைத்து விடுகிறார் கண்ணழகி தமிதா சூஸன்! ஜெயா டீ.வி.யில் 'டேக் 5', 'சினிமா பார்வை' நிகழ்ச்சிகளின் நங்கூர அழகி. 'மிஸ் பியூட்டிஃபுல் ஐஸ்' என்ற பட்டத்தை வென்று வாகை சூடியிருக்கும் சூஸ னிடம், கண்களைப் பற்றி சில டிப்ஸ்களைப் பெற்று, உருப் படியாக உதவியிருக்கிறோம். வாசகர்கள் பயனடை வார்களாக!

★ இரவில் வெகுநேரம் கண்விழிக்கக் கூடாது. கண்கள் சோர்வடைவதோடு, கரு வளையமும் விழும்.

★ நிறைய காரட், பப்பாளி, முருங்கைக் கீரை, பால், தக்காளி சாப்பிடவும்.

★ அதிக வெளிச்சத்திலோ மங்கலான வெளிச்சத்திலோ படிக்கவோ, டீ.வி. பார்க்கவோ கூடாது.

★ சூரிய ஒளிக்கதிர்கள் கண்ணுக்குத் தீங்கு விளைவிப்பவை. வெயிலில் அலைபவர்கள், தக்க கறுப்புக் கண் ணாடியை மருத்துவரின் ஆலோசனைப் படி அணிய வேண்டும்.

★ குளிர்ச்சியான நீரில் கண்களை மூழ்கச் செய்து, திறந்த நிலையில், கண் மணியை இலேசாகச் சுழற்றுங்கள். தினமும் ஐந்து நிமிடம் இப்படிச் செய்தாலே போதும்... கண்கள் ஃப்ரெஷ் ஆகி விடும்.

★ சில பெண்களுக்கு கண்களுக்கு அடியில் வீங்கி இருக்கும். இதற்கு உருளைக் கிழங்கை உதவிக்கு அழைத்துக் கொள்ளுங்க. உருளைக் கிழங்கைத் தோலு டன் அரைத்து, சின்னச் சின்ன துண்டுத் துணியில் முடிந்து ஃப்ரிஜ்ஜில் வைக்கவும். குளிர்ந்த உருளை விழுது மூட்டைகளை கண்களுக்கு மேலே வைத்துக்கொண்டு, ரிலாக்ஸ் செய்து கொள்ளுங்க. கண்களுக்கு அடியில் முகா மிட்டிருந்த வீக் கம் காணாமல் போயிருக்கும். கண்களும் புது பேட்டரி போட் டது போல பளிச்.

- ஐஸ்வர்யா

# DOUBLE THRILL

## HARRY POTTER MANIA

**FORUM FOR DISCUSSION**

**PERSONALITY QUIZ**





## MADHAVAN ANSWERS QUESTIONS

**STAR RENDEZVOUS**

*Every Child Must Possess A Copy*

# GOKULAM

*The monthly magazine for children*

**February 2003**

**Rs.6/- only**

*For subscription details write to :*

**Circulation Manager**
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, CHENNAI - 600 097.
e-mail : subscription@kalkiweekly.com

# சீட்டுக் கட்டு மாஸ்டர்!

(இவர் மூளைக்கு எத்தனை மெகாபைட் மெமரி?)

"**கா**ர்ட்ஸ் ஆடலாம் வர்றீங்களா?"

– ஆனா, கொஞ்சம் வேற மாதிரி, ரம்மி, டிக்ளேர், 304, எல்லாம் இல்லை.

பாருங்க – ஒரு சீட்டுக் கட்டு. அரைமணி நேரம் நல்லாப் பாத்துக்கோங்க. பாத்துட்டீங்களா? சரி.

இப்போ என்ன வரிசையில் பாத்திங்களோ, அதே வரிசையில் சொல்லணும். முடியுமா?

"அட, அட, என்ன எழுந்துட்டீங்க?"

இங்கே ஒருத்தர் இருக்கார். ஜான் லூயிஸ்ன்னு. லண்டன்ல ஒரு மணி நேரத்தில் எட்டு சீட்டுக்கட்டுக்களைப் பார்த்து, (416 சீட்டுக்கள்) அதே வரிசையில் சொல்லி 'கிராண்ட் மாஸ்டர் ஆப் மெமரி'ங்கற பட்டம் வாங்கியிருக்கார். அடுத்து ஒரு சீட்டுக்கட்டுப் பூரா 132.5 நொடிகள் பாத்துட்டு சரியாச் சொல்லி, இரண்டாவது கிராண்ட் மாஸ்டர் ஆப் மெமரி பட்டத்தையும் வாங்கிட்டார்.



நான்கு ஆண்டுகளாக இந்தியா இந்தப் போட்டிகளில் கலந்து கொண்டாலும், இந்த வருஷம் இரண்டு பேர் கலந்து கொண்டு பங்கேற்றதில், ஜான் லூயிஸ் மேலே சொன்னபடி இரண்டு பட்டங்களையும் வாங்கியிருக்கார்.

(அவரோட மூளை எத்தனை மெகாபைட், தெரியலை)

ஜான் லூயிஸ் டால்மியாபுரம் மேனிலைப் பள்ளியில் வேதியியல் முதுகலைப் பட்டதாரி ஆசிரியர்.

இவர் லண்டன் போய்வரும் செலவுகளை டால்மியா சிமெண்ட் நிறுவனமும், சென்னை மேக்னா பொறியியல் கல்லூரி அதிபர் தேவதாஸ் நாயகமும் ஏற்றுக் கொண்டார்கள்.

'ஏசியாட்டிக் 2001' நினைவாற்றல் போட்டியில் இவர் கலந்து கொண்டு முதல் பரிசைத் தட்டிக் கொண்டு வந்தார்.

சங்கிலித் தொடர்முறை, கொக்கி முறை, வார்த்தைப் பதிலீட்டு முறை (அர்த்தமில்லாத வார்த்தைகளைப் பிரித்துப் போட்டு அர்த்தத்தோடு நினைவு கொள்ளுதல்) – என்று வேறு வேறு முறைகளில் நினைவாற்றலை வளர்த்துக் கொள்ளலாம் என்கிறார். அமெரிக்காவின் ஹேரிலோரென் எழுதின "How to develop super power memory"-ங்கற புத்தகம்தான் வழிகாட்டி இவருக்கு.



**தி**ருச்சி தில்லை நகரில் நினைவாற்றல் பயிற்சி வகுப்புகள் நடத்தி வரும் இவர் "நினைவாற்றல் வித்தைகள்" என்கிற நூலையும் எழுதி வருகிறார்.

– ஸ்ரீரங்கம் திருநாவு

''படம் இப்பத்தான் சென் ஸார் போர்டுக்கே போயிருக்கு... அதுக்குள்ளே படத்துக்கு நீங்க விமர்சனம் எழுதிட்டீங்களே... எப்படி?''

''போன வாரமே திருட்டு விசிடிலே பார்த்துட்டேன்!''

- தஞ்சை தாமு



# பின்னிட்டீங்க தலைவா!



''என்னங்க நம்ம தலைவரு அவருடைய 56வது பிறந்த நாளை 62வது பிறந்த நாள்னு சொல்றாரு?''

''கட்சித் தொண்டர்கள் அவருக்குப் பிறந்த நாள் பரிசா, ஒரு வயசுக்கு ஒரு பவுன் வழங்கப் போறதா அறிவிச்சிருக்கிறாங்களே.''

- விட்டுக்கட்டி மு. பெரியசாமி



''நாள் தவறாம கச்சேரிக்குப் போகிற நான் இந்த சீஸனில் ஒரு கச்சேரிக்குக் கூட போகலேன்னு சொன்னா நம்ப முடியுதா?''

''ஏன்! கண்ட கான்டீனிலும் தின்னு உடம்பைக் கெடுத்துக்காதீங்கனு டாக்டர் சொல்லிட்டாரா?''

- உ. ராஜாஜி



''பெண்ணே! உன் தொல்லை தாங்காமல் உன் கணவன் பத்து வருஷத்துக்கு முன்பே ஓடியிருக்க வேண்டுமே?''

''அட... எப்படி சாமி கண்டு பிடிச்சீங்க?''

''இதுல கண்டுபிடிக்கிறது என்ன? என்னைப் பற்றி எனக்கே தெரியாமல் போகுமா?''

- தஞ்சை தாமு

**உ**திரம்போல்
உனக்குள் நான்
இருப்பதாலே
உனக்கெப்போதும்
காயங்கள்
கூடாதென்பேன்
பிழையாக நேர்கின்ற
காயத்தால் நான்
வெளியேறி விடுவேனோ
பயந்து போனேன்

**ஈ**சான்ய மூலையிலிருந்து நடவைத் தொடங்கினால் மகசூல் சிறப்பாய் இருக்கு மென்பது ஐதீகம். மழையும் உரமும் ஒத்தி சைந்த போதிலும், நம்பிக்கைகளே விளைச் சலைத் தருமென்பது உழைப்பாளிகளின் தத்துவம்.

காதல் கண்களிலிருந்து துவங்கும் நடவு, ஒரு கண்ணில் நட்டு இன்னொரு கண்ணில் அறுவடை செய்து கொள்ளும் அதிசயம். இதில், நீருக்குப் பதில் உதிரத்தைப் பாய்ச்ச வேண்டும். உரத்திற்குப் பதில் அவஸ்தை களைக் குறைக்க வேண்டும். பூச்சியடிக் காமல் பயிர்களைக் காவந்து செய்வதைப் போல், ஊடல்களில் உடைந்து போகாமல் உள்ளத்தைப் பேண வேண்டும். ஈழத்து நாட்டுப் பாடல்கள் இயற்கையின் உதடு களால் காதலைப் பாடும். தமிழில் வானமா மலை போல, ஈழத்தில் எப்.எக்ஸ்.சி. நடராசா தொகுத்துள்ளார். ஒன்றைத் தொகுப்பதற்குப் புலமை மட்டும் போதாது. கால வரலாறும் பொறுப்புணர்வும் மிக மிக முக்கியம். நடராசா அதை உணர்ந்தவர் மட்டுமன்று, உணர்ந்ததை உருவம் கொடுக்கும் வல்லமையுமுடை யவர்.

தாலாட்டுத் தொட்ங்கி ஒப்பாரி வரை பாடல்களால் ஆன தமிழ்வாழ்வை கொஞ் சமும் பிழையின்றி நீரோடை இலைபோல இயல்பாக வடித்துத் தந்துள்ளார். மனிதர் களின் ஆசா பாசங்கள்தான் இலக்கியத் தின் மூலமென்பது எத்துணை உண் மையோ, அதேபோல, இயலாமையின் குரல்களே நாட்டுப் பாடல்களின் நாதம். 'நாட்டுப் பாடல்கள் இலக்கியமில்லையா' எனக் கேட்கலாம். நாட்டுப் பாடல்கள் வேர்வையின் விளைச்சல். வேர்வைகளைத் தீர்த்தமென்று இலக்கிய ஜாம்பவான்கள் ஏற்றுக் கொள்வதில்லை.

வார்ந்து முடிந்த
கொண்டை
மகிழம்பூ கமழும்
கொண்டை
சிர்குலைந்து
வேர்வை சிந்த
செய்த கடும்
வேலையென்ன?
பொட்டுக்கரைய
பிறைநெற்றி
நீர்துளிக்க
கட்டுந்துகில்
கலைய
வடம்புரிபுரள
மார்பு
பதைப்பதென்ன?
மலர்க்கண்கள்
சிவப்பதென்ன?
சோர்வு
கதிப்பதென்ன?
சொல்விடுகா என்
மகனே.

# புகபாரதி

**ஒ**ருத்தி காதல் கொண்ட விஷயம் அவள் காதலனுக்குத் தெரிவதற்கு முன் பாகவே அவள் தாய்க்குத் தெரிந்து விடுகிறது. வாசலில் கோலமிடும்போது புள்ளி விலகுவதும், நீரெடுக்கப் போகும் போது வெறுங்குடத்தோடு திரும்புவதும் என நிறையச் செயல்கள் மாறிப் போகும். ஒரே வேலையைத் தொடர்ந்து செய்தால் பழகிப் போகும் என்பார்கள். கோலமிடுதல், நீரெடுத்தல் யாவும் பழகிய செயல்தான். எனினும், அது பிழையாவது காதலின் கைம்மாறு. பொட்டுக் கரைய; பிறை நெற்றி நீர்துளிக்க; கட்டுந்துகில் கலைய; சங்கு புரளும் சந்தன மார்பு பதைப்பதென்ன? ஈன்ற தாய் இதையறிய மாட்டாளா? அவளுக்குத் தெரியும். பெண் மீதும் வீசும் ஆண் வாடையை; கண்மீது போடும் கனவு மேடையை நன்கறிவாள். காதலைத் தாய்

யப்பன், இளம்பிறை, நட. சிவக் குமார். இதில், பச்சியப் பனும் இளம்பிறை யும் விவசாயக் கூலிகளின் மனத் தைத் துல்லிய மாய்ப் பதிவு செய் பவர்கள்.

மடுவங்கரையில்
திருட்டுத் தனமாய்
நேர்ந்த சந்திப்பில்
முத்தம்பதித்த
பதைப்போடு
நீ பிடுங்கிய
என் மார்பு முடிகள்
மஞ்சு விரட்டில்
கீழ் வல்லத்துச்
செவலையின்
கொம்பிலிருந்து உருவிய
துணியில்
உனக்குத் தைத்துத் தந்த
ரவிக்கை

இது, பச்சியப்பனின் கவிதை.



# காதல் பிசாசே!

அறிவாள் என்றாலும், சபையில் பேசத் தயங்குவாள். அடி நெஞ்சில் ஆதரவும் உதட்டில் எதிர்ப்பும் அவர்களது நிரந்தரக் கொள்கை. காதலுக்குத் துணைபுரியும் தாய்களுக்குக் கோடி நமஸ்காரம்.

நாட்டுப் பாடல்களின் தொடர்ச்சி போல, தமிழில் அவ்வப்போது சில கவிதைகளை வாசிக்க முடிகிறது. 'சனங்களின் கதை' தொகுப்பில் பழமலய், சந்நதம் தொகுப்பில் வித்யாஷங்கர் ஆகியோரைத் தொடர்ந்து என்.டி.ராஜ்குமார், பச்சி

நாட்டுப் பாடலின் தொடர்ச்சி என்பதைச் சொல்வதற்கு ஏதுவான கவிதை. மஞ்சு விரட்டில் மாட்டை அடக்கி, அதன் கொம்பிலிருந்து உருவிய துணியில் அவளுக்கு ரவிக்கை தைத்துக் கொடுத்தாராம். ரவிக்கை மானத்தின் அடையாளம். என் வீரம் உன் மானத்தைக் காக்கும் ஆற்றலுடையது என்பதை இதை விட சிறப்பாக எழுதிவிட முடியுமென்று தோன்றவில்லை. காதலியின் பிரிவை எழுதுகிற இவர்போல, நாட்டுப் பாடலில் காதலனின் பிரிவைப் பாடுகிறாள் ஒருத்தி. இதுவும் ஈழத்து நாட்டுப்



## குட்டியின் போட்டி!

ஜெயா டி.வியில் வெளிவரவிருக்கும் 'சபாபதி +2' மெகா தொடரில் 'சின்ன பாப்பா... பெரிய பாப்பா' ஸ்டைலில் குட்டி பத்மினியும், ஜோதிலட்சுமியும் மாமியார் மருமகளாக மோதுகிறார்கள் என்று கேள்விப்பட்டு தொடர்பு கொண்டால், விஷயம் வேறொரு ரூட்.

"'சபாபதி + 2' என்றதும் ப்ளஸ் டூ மாணவன் கதை என்று நினைத்து விட வேண்டாம். ஒரு மனைவியே, தன் கணவனின் ஆயுள் கருதி, அவனுக்கு இரண்டாந்தாரமாக ஒரு பெண்ணைக் கட்டி வைக்க மேற்கொள்ளும் நகைச்சுவைப் போராட்டமே கதை!'' என்றார் குட்டி பத்மினி.

சன் Vs ஜெயா போல, ராதிகா Vs குட்டி பத்மினி?

- ஆது

பாடல்தான்.

*மனசை மனசறியும்*
*வஞ்சகத்தை நெஞ்சறியும்*
*மனசிலுள்ள பூங்காரத்தை - அல்லா,*
*யாரறியப் போறங்கா?*
*முந்திரிக்குக் கீழே*
*முத்துமணல் பாயிருந்து*
*மச்சாண்ட மடியில் - நான்*
*மகிழ்ந்திருத்தல் எப்பொழுதோ?*

மனசுக்கும் நெஞ்சுக்கும் என்ன வேறுபாடு? வஞ்சகத்தை நெஞ்சறியும் என்றால் என்ன பொருள்? மனசை மனசறியும் என்பவள் நெஞ்சை வஞ்சகத்தோடு ஏன் இணைக்கிறாள்? மனம் வேறு, நெஞ்சம் வேறா? இந்த நுட்பமான புரிதலை விளங்கிக் கொள்ள அரும்பாடாயிற்று. ஆம், வேறுபாடுண்டுதான்: மனதென்பது உள்ளம். நெஞ்சமென்றால் அன்பு. அன்புள்ள நெஞ்சமே வஞ்சகம். இவள் தவித்துக் கிடப்பது காதலின் வஞ்சகம். மடுவங்கரையில் முத்தம் பதித்தவனிடம் பிடுங்கிய மார்பு முடியும், முந்திரிக்கு கீழ் முத்துமணல் பாயிருந்தும் மச்சானின் மடியில் மகிழ நினைப்பவளும் ஒருத்திதானே. புரியாமல் எழுதுவது; புரியும்படி எழுதுவது என இரண்டு கோஷ்டிகள் எல்லாக் காலத்தும் உண்டு. அவர், இவரையும் இவர் அவரையும் இங்கிதமில்லாமல் அங்கதம் செய்வது இலக்கிய விசாரம். எதுவானாலும் கவிதை, கவிதைதான். இது நாட்டுப் பாடல்களின் தனித்துவம்.

புரிந்து கொள்ள முடியாத உணர்வுகளின் முதல் நுனிதான் காதல் விதையின் இமைகளைத் திறக்கிறது. மெல்ல மெல்ல புரிந்துணர்வை, பூமியின் அழகைப் புரிய வைக்கிறது. முதல் வார்த்தையிலேயே 'காதலிக்கிறேன்' எனச் சொல்லி விடாமல், கவிதையின் இறுதியைப் போல காத்திருக்க வைப்பதே காதலின் மகிமை.

ஆராதனைக்காகக் காத்திருக்கும் ஆலயத்தில் தீபத்தைக் காட்டும்போது கண்களை மூடிக்கொள்ளும் பக்தர்களைப் போல, வார்த்தைகளுக்காகக் காத்திருக்கும் காதலில் மௌனங்களே அதிகம் பேசும். நூறு கடல்; ஆயிரம் இடியோசை எழுப்பாத சத்தத்தை, உன் மௌனம் எழுப்பி விடுகிறது. இந்த மௌனத்தின் பதில் இன்னொரு மௌனம் என்பதைப் போல, என் இதழ்களும் இறுகிக் கிடக்கின்றன.

*மண்டிக் கிடக்கும்*
*காரமுட்களுக்கிடையில்*
*தளிர்த்தவைகளைப்*
*பசியோடு கடிக்கும்*
*வெள்ளாட்டினைப் போல*
*ஆடைகளுக்குள் உன் வாசம் தேடி*
*குளிர்கிறதென் பூமி.*

பசித்த உதடுகள் பண்பறியாது. பண்பை வரவழைக்கப் பசிக்குத் தெரியாது. தாகத்தோடு திரிபவனுக்குக் குளத்து நீர் புனிதம். அள்ளிக் குடித்து தாகம் அடங்கினால் போதுமென்று கருதுவதே இயற்கை. ஆடைகளில் வாசம் தேடும் பச்சியப்பனின் மனது, கார முட்களால் காய்த்துப் போனது. தளிர்த்தவைகளைப் பசியோடு கடிக்கும் ஆட்டைப் போல், பிரிவின் பசிக்கு ஆடைகள் உணவாகின்றன. எனினும் காதல் தாகமல்ல. தாகத்தைத் தீர்க்க முடியும். காதலைத் தீர்க்க முடியாது. காதல் பசியுமல்ல. எனில், பசியைப் போக்க முடியும்; காதலைப் போக்க முடியாது. பசியோடும் தாகத்தோடும் இருப்பதை விடவும் காதலோடு இருப்பது நல்லது. ஈசான்ய மூலையிலிருந்து தொடங்கும் நடவைப் போல, எந்த மூலையிலிருந்து துவங்குவது இதயத்தின் அறுவடையை?

(தொடரும்)

கடன் தொல்லை, தரித்திரம் நீங்கி லக்ஷ்மி கடாக்ஷம் பெருக, ஆயுள் விருத்தியாக



# புண்ணியக்ஷேத்ரம் இராமேஸ்வரத்தில் தை அமாவாஸை திதியில்

## வேஷ்டி, புடவை தானமளித்து அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

அன்புடையீர், அனேக நமஸ்காரம். தலம், தீர்த்தம், மூர்த்தி இவற்றால் சிறப்புக்குரிய பல க்ஷேத்ரங்களில் இராமேஸ்வரம் பெருமைமிக்க புண்ணிய ஸ்தலமாகும். ராமஸேது என்றும், ஸேது ஸ்தலம் என்றும் போற்றப்படும் இராமேஸ்வரம் புகழ்மிக்க புண்ணிய க்ஷேத்ரமாகும். இராமேஸ்வரத்தில் அன்னதானம் செய்வதும் ஜபம், ஹோமம், தானம் செய்வதும் அழியாத புண்ணியப் பலன் கிடைக்கும்.

இராமேஸ்வரத்தில் அமாவாஸை தினத்தில் அன்னதானம் செய்தால் மனித குலம் மாபெரும் புண்ணியத்தை பெறும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். அனைவரும் நலம் பெறுவர். இராமேஸ்வரத் தில் அமாவாஸை அன்று அன்னமளிப்பவன் ப்ராணனளிப்பவன் ஆகிறான். அன்னமளிப்பது அமிர்தமளிப்பதற்கு சமம். இந்த புண்ணிய பூமியில் அன்ன மளிப்பவன் மிக்க செல்வந்தராய் பிறப்பான். வறுமை நீங்கி, பெரும் பணக்காரனாவான். அன்னதானம் செய்பவனுக்கு போகமும், ஆயுளும், அழகும் பெருகும். பலம், புகழ், கீர்த்தி இவை உண்டாகும்.

★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ ஆக நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக அன்னதானமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.

★ வஸ்த்ர தானம் செய்திட வேஷ்டி புடவைகளை வாங்கி அன்பர்கள் குரியர் மூலம் அனுப்பி வைக்கலாம்.
★ ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ரூ.1000, ரூ. 5000 அனுப்பும் அன்பர்களுக்கு கந்தபுராணம் அல்லது பகவத்கீதை புத்தகம் அனுப்பி வைக்கப்படும். விசேஷமான தை அமாவாஸையில் ஏழை எளியோர்களுக்கும், சாதுக்களுக்கும், அந்தணர்களுக்கும் அன்பர்கள் சார்பாக வேஷ்டி, புடவைகளை வாங்கி எமது அறக்கட்டளை வஸ்த்ர தானம் செய்யவிருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம். புதிய வஸ்த்ரங்களை வாங்கி அனுப்பி அன்பர்களும் பங்கு கொள்ளலாம். ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்திக்கு அணில் செய்த ஸேவை போல் இந்த லோக க்ஷேமத்திற்கு நம்மால் இயன்றளவில் உபகாரம் செய்திடுவோம்.

நன்கொடை அனுப்பும் அன்பர்கள் GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41 என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். புனித ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை என்றென்றும் நாடுகிறோம்.

*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*

## கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை

## GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST

M-11/F-4, TNHB FLATS, I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR,
THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA
☎: 24900303, 24900603 Fax: (044) 24916316

★ நீங்கள் தேடும் மனநிம்மதி அன்னதானத்தில் கிடைக்கிறது ★ ஸர்வேஜனா: - ஸுகினோபவந்து



''பெரிய பாடகர். ஆனா பாவம்...
கல்யாணமே பண்ணிக்கலை.''
''ஏன்?''
''கல்யாணத்துக்கப்புறம் வாயே
திறக்க முடியாதே!''



''எந்தக் காய்க்கு சலவை
போடலாம்?''
''இது கூட தெரியாதா?
சொக்காய்!''



"நேத்து தொலைஞ்சு போன அதே இடத்துலே என்னோட வாட்ச் கிடைச் சது."

"ஆச்சரியமா இருக்கே எப்படி?"

"என் வாட்ச்தான் ஓடாதே."



"இரண்டு காதலர்கள் பீச்சுல உட்கார்ந்து பொய் பொய்யா பேசிக்கிட்டிருந்தாங்க...ஏன்?"

"அவங்க மெய் மறந்துட்டாங்க."

"வக்கீலும் குக்கரும் ஒண்ணா?"

"எப்படி?"

"எப்பவும் கேஸ்கட்டோட இருக்கே?"





"உன் காதலி முடியாம இருந்தாளே என்ன பண்ணினே?"

"ஹேர் கிளிப் வாங்கிக் கொடுத்தேன்."

# அலம்பறாங்கடோய்!



# நேற்றைய மனிதன்!

அவர் மக்களின் வாழ்த்துக்களை ஏற்றுக் கொள்கிறார். சட்டென்று அவர் முகம் மலர்கிறது. கூட்டத்தின் நடுவே யாரையோ அடையாளம் கண்டு கொண்டு முகம் மலரச் சிரிக்கிறார். ஓரமாக நின்று கொண்டிருந்த அந்தப் பழம் விற்கும் எளிய வியாபாரிக்கு வாயெல்லாம் பல்! இத்தனைக் கூட்டத்தின் நடுவில், இத்தனை பெரிய மனிதர்களுக்கிடையில், தன்னையும் மறக்காமல் அடையாளம் கண்டு கொண்டாரே இந்தப் பெரிய மனிதர் என்று அவருக்கு வியப்பு.

யார் இந்தப் பெரிய மனிதர்...?

சமீபத்தில் இந்தியாவில் பயணம் மேற்கொண்ட சிங்கப்பூர் அதிபர் எஸ்.ஆர். நாதன்தான்! அந்தக் காலத்தில் மலேசியா, சிங்கப்பூருக்குச் சென்ற பல தமிழர்கள் ரப்பர் தோட்டத் தொழிலாளர்களாகச் சென்றார்கள். அதிபர் மாளிகை கட்டும் போது இந்தத் தொழிலாளர்களின் உழைப்பும் பயன்பட்டது. தமிழர்களின் உழைப்பால் எழுப்பப்பட்ட ஒரு மாளிகையில் இன்று ஒரு தமிழரே தலைவராக வசிப்பது தமிழர் பெருமையைப் பறை சாற்றுகிறது.

78 வயதாகும் நாதன், 1999ல் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவுடன், தாம் பேசிய முதல் பத்திரிகையாளர் கூட்டத்தில், தம்மை "நேற்றைய மனிதன்" என்று வர்ணித்துக் கொண்டார். அவர் ஜனாதிபதியாக அறிவிக்கப்பட்டதுமே அவரை வாழ்த்த கூட்டம் திரண்டது. சாதாரண லுங்கி அணிந்தபடி வரவேற்று உரையாடினார். அந்தச் சமயத்தில் இது சிங்கப்பூரில் ஒரு சிறு சர்ச்சையைக் கூட கிளப்பிவிட்டது- வருங்கால ஜனாதிபதியை இப்படி லுங்கியுடன் போட்டோ எடுத்துப் பிரசுரிக்கலாமா? என்று.

சிங்கப்பூரில் பிறந்த நாதன், 16 வயதில் பெற்றோருடன் மலேசியா சென்று, அங்கே ஜோஹோர் என்ற ஊரில் ஆபீஸ் பையனாகப் பணி புரிந்தார். பின்னர் படித்து சிவில் சர்வீஸில் தேர்வு செய்யப்பட்டு பல அரசு பதவிகளை வகித்தார். மலேஷியா மற்றும் அமெரிக்காவில் சிங்கப்பூரின் தூதுவராகவும் பணியாற்றியுள்ளார்.

மத்திய தர வர்க்கத்தில் பிறந்து வளர்ந்த நாதனுக்கு, சிங்கப்பூரின் தொழிற் சங்க வளர்ச்சியில் பெரும் பங்குண்டு. ஜனாதிபதியாவதற்கு முந்தைய நாள் வரை, நேஷனல் டிரேட் யூனியன் காங்கிரஸ் என்கிற தொழில் சங்க அமைப்பின் வேலைகளில் ஈடுபட்டிருந்தார். சொல்லப்போனால், அதிபர் தேர்தலுக்கான வேட்புமனுவை அந்தச் சங்கத்தின் வேன் ஒன்றில் சென்றுதான் பதிவு செய்தார்.

சிங்கப்பூரின் அடிமட்டத் தொழிலாளர்களிடையே செல்வாக்கு உள்ள இந்த அதிபரின் மனைவி பெயர் ஊர்மிளா - பெங்காலைச் சேர்ந்தவர். ஒரு மகன், ஒரு மகள், மூன்று பேரக் குழந்தைகள் நாதனுக்கு.

- அருணா

# அவள் வருவாளா?

இரண்டு மாதங்களாகவே தாயிடம் சொல்லி அழுதிருக்கிறாள் சூர்யா. தான் பள்ளிக்குச் செல்லும் போதும், பள்ளியை விட்டு வரும் போதும், டியூஷன் முடிந்து இரவு நேரத்தில் தனியாக வீடு திரும்பும் போதும் சரி, குறிப்பிட்ட மூன்று இளைஞர்கள் தன்னை சைக்கிளில் துரத்திக் கொண்டு வருவதாக. சத்துணவு டீச்சராக வேலை பார்க்கும் சித்ராவால், காலையிலும் மாலையிலும் தன் ஒரே மகளுக்குத் துணையாக உடன் சென்று வர முடிந்ததில்லை. அதனால் ஒரு வாரமாக இரவு டியூஷன் விட்டு வரும் நேரத்துக்கு மட்டும் சென்று, மகளை உடன் அழைத்து வந்து கொண்டிருந்தார் அவர்.



இனி, சித்ராவே சொல்கிறார் : நைட்டு எட்டு மணி இருக்கும். எப்பவும் போல டியூஷன் முடிஞ்சு எம் பொண்ணைக் கூட்டியாத்துக்கிட்டு இருந்தேன். ஒரு மூணு பேரு சைக்கிளை நெருக்கமா ஓட்டியாந்து, கிண்டல் பண்ணிட்டுப் போனான்க. 'ஒரு அம்மாக்காரி கூட வர்றப்பயே பொம்பளப் புள்ளையெக் கிண்டல் பண்ணிட்டுப் போறீங்களேடா...'ன்னு சப்தம் போட்டேன். அதுல சுந்தர்ங்கிற ஒருத்தன் எம் பொண்ணு பக்கத்துல வந்து, என்னவெல்லாமோ பேசி நக்கலடிச்சான். நான் சத்தம் போடவும் தப்பிச்சுப் போயிட்டாங்க.

தெரு ஜனங்க கூட்டம் கூடவும், எனக்கே என்னவோ போல ஆயிடுச்சு. அப்புறம் எம் மககிட்டே, "நீ வீட்டுக்குப் போ. நம்ப சொந்தக்காரங்களுக்கு ஃபோன் பண்ணிட்டு வர்றேன். போலீஸ்ல கம்ப்ளெயிண்ட் குடுத்தாத்தான் சரியா வருவானுங்க!"ன்னு சொல்லி அனுப்பிச்சிட்டு, பூத்துக்கு போன் பண்ணப் போனேங்க. லைன் கிடைக்கலைங்க. நான் ஃபோன் பேசிட்டுத் திரும்பறதுக்குள்ள பக்கத்து வீட்டுக்காரங்க அலறியடிச்சிட்டு ஓடியாந்தாங்க. "உம் பொண்ணு நெருப்பு வைச்சுக்கிச்சு"ன்னு சொன்னாங்க. பதறியடிச்சு ஓடினேன். அதுக்குள்ள எம் பொண்ணு உசிரு போயி சேர்ந்திடிச்சு. எம் மவ இனி வருவாளா?" என்று கண்ணீர் பெருக்கினார்.

கணேஷ் நகர் காவல் நிலையத்தில் 'ஈவ் டீசிங் மூலமாக தற்கொலைக்குத் தூண்டியதாக' வழக்குப் பதிவாகியுள்ளது. சம்பவம் நிகழ்ந்த மூன்று நாள் கழித்து, சுந்தர் என்பவன் கைது செய்யப்பட்டுள்ளான்.

"நான் சூர்யாவை ஒருதலையாகக் காதலித்து வந்தேன். என் காதலை வெளிப்படுத்தவே, அன்று நான் சூர்யாவிடம் நெருங்கிச் சென்று பேசினேன். இது தற்கொலையில் போய் முடியுமென நான் எண்ணவில்லை!" எனக் காவல் துறையிடம் கூறியுள்ளான் சுந்தர். ஈவ் டீசிங் குற்றத்திலிருந்து தப்பிப்பதற்காக, அவன் இப்படிக் கூறலாம் என்கிற கருத்தும் நிலவுகிறது. போஸ் நகரில் நாம் விசாரித்த வகையில், அப்பகுதிகளில் பள்ளி மாணவிகளை இளைஞர்கள் கிண்டல் செய்து வருவது, ஒரு தொடர்கதையே எனக் கூறுகின்றனர்.



"என் மகள் இனி வருவாளா?" என்கிற சித்ராவின் கேள்விக்கு யார் பதில் சொல்வது?

கட்டுரை, படம் :
ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

சிவஞானம் இரண்டு தெருக்களைக் கடந்து நடந்து, இணையவலை மையத்திற்குக் காலை எட்டு மணிக்கே சென்றுவிட்டார். பணத்தைக் கொடுத்துவிட்டு, அரவிந்தனிடமிருந்து வந்த மின் அஞ்சலைப் பெற்றுக் கொண்டு, உடனே அங்கேயே உட்கார்ந்து படித்தால்தான், அவருக்கு நிம்மதி.

அச்சம்பத்து கிராமத்தில் அந்த வலை மையத்தை, இரண்டு இளைஞர்கள் தொடங்கியிருந்தார்கள். ஒவ்வொரு வியாழனும், பொழுது விடிய வேண்டியது தான், சிவஞானமும் தவறாது அங்கு வருகை தந்து விடுவார்.

அவர் வீட்டுக்குத் திரும்பும் போது, மணி ஒன்பது ஆகிவிட்டது. வெய்யிலில் சென்றதால் நாக்கு வறண்டது.

''கோமதி! குடிக்கத் தண்ணி கொண்டா'' என்றவர், மேல் துண்டால், முகத்தைத் துடைத்துக் கொண்டார்.

''சாப்பிட்டுட்டுப்

# சிந்து

போங்கன்னா கேட்டால் தானே?'' என்றவாறு, அவர் மனைவி, சின்னச் செம்பில், தண்ணீர் கொடுத்தாள்.

''அங்க ஒரே கூட்டம்...'' அவளிடம் கடிதத்தை நீட்டினார்.

''உங்க தத்துப்பிள்ளையிடமிருந்து ஈ.மெயில் வந்துருச்சா...?''சிரித்தவாறு கடிதத்தைப் படித்தாள்.

'டியர் சார்' என்று அன்போடு தொடங்கி, கலிபோர்னியாவில் தன் அலுவலக வேலை, நண்பர்கள், சென்ற ஞாயிறு அவர்களுடன் சென்றிருந்த அருங்காட்சியகம் என தெளிவாக ஆங்கிலத்தில் செய்தி அனுப்பியிருந்தான் அரவிந்தன். சிவஞானத்தின் உடல் நிலையையும், கோமதி மாமியையும் பற்றி, அக்கறையோடு விசாரித்திருந்தான்.

ஒன்பது ஆண்டுகளுக்கு முன்பு, அரவிந்தனை அவன் தந்தை ஆறுமுகம், சிவஞானத்திடம் தமிழில் பயிற்சி எடுத்துக்கொள்ள, வீட்டுக்குக் கூட்டி வந்தார். ''எனக்குப் பூர்வீகம் மதுரைதான். தபால் துறையில் வேலை. டில்லியில் ரொம்ப வருஷம் இருந்துவிட்டேன். இப்ப இங்க மாறுதல் ஆயிருக்கு. இவன் ஒரே பையன். இங்க அரசரடியில் வீடு. இங்கிலீஷ் மீடியம் ஸ்கூல்ல சேர்த்திருக்கேன். செகண்ட் லாங்குவேஜ் தமிழ்தான். ஆனா அதிலே ரொம்ப வீக். தமிழ்ல பெயிலாகி, அவன் எதிர்காலம் போயிடுமோன்னு பயப்பட்டேன். என்னோட இங்க ஒர்க் பண்றவங்க ஒங்க கோச்சிங் எக்ஸலண்ட்ன்னு சொன்னாங்க. இனி அவன் டென்த்லேயும், ப்ளஸ்டூவிலும் தமிழ்ல நல்ல மார்க் வாங்க வேண்டியது ஒங்க பொறுப்பு'' என்று மூச்சுவிடாமல் 'மடமட'வென்று,

# அன்புள்ள அரவிந்தன்...



ஆறுமுகம் சொல்லிச் சென்றவுடனேயே, அரவிந் தனுக்குப் பயிற்சியைத் தொடங்கி விட்டார் சிவஞானம்.

'தமிழே தன் உயிர்' என்றிருக்கும் சிவ ஞானம், அச்சம்பத்து அரசினர் பள்ளியி லிருந்து ஓய்வு பெற்ற தமிழாசிரியர். குழந்தைகள் இல்லாததால், எல்லா மாணவர்களுமே அவருக்குப் புத்திரச் செல்வங்கள்தான். பயிற்சிக் கட்டணம் பற்றி அவர் மாணவர்களின் பெற்றோர்களிடம் சொன்னதே இல்லை. அவர்கள் கொடுத் ததை, மனத் திருப்தியுடன் பெற்றுக் கொண்டு, உடனே கோமதியிடம், வீட்டுச் செலவுக்குக் கொடுத்து விடுவார். சிலர் இரண்டு மூன்று மாதங்கள் பணம் கொடுக் காமல் இருந்துவிட்டு, தங்கள் புதல்வர்கள் தேர்வு முடித்ததும், சிவஞானம் இருக்கும் தெருப்பக்கம் கூட வரமாட்டார்கள். அதற் கும் அவர் கவலைப்பட்டதே கிடையாது. ''எனக்குத் தெரிந்த தமிழறிவை, நாலு பேருக்குக் கற்றுக் கொடுக்கிறேனே, அந்த மனநிறைவுதான் எனக்கு இறைவன் கொடுக்கும் கூலி'' என்று மனைவியிடம் கூறுவார்.

சிவஞானத்துக்கு ஓய்வூதியமும் வந்த தால், குடும்ப வாழ்க்கை அதிகச் சிரம மில்லாமல் நகர்ந்தது.

அரவிந்தன், பள்ளி முடிந்ததும், மாலை யில் சரியான நேரத்துக்கு, ஆசிரியர் வீட்டுக் குத் தினம் வந்தான். அவனுடைய சாந்த மான, களையான முகம், பணிவான பேச்சு, தந்தை உயர் பதவியில் இருந்தாலும் கர்வமின்மை, தமிழைக் கற்கும் ஆர்வம் இவையெல்லாம், சிவ ஞானத்தைப் பெரிதும் ஈர்த்தன. ''நம் மாநிலத்திலேயே, தமிழைப் பள்ளிகளில் அலட்சியப்படுத்து கிறார்கள். பாவம், இவன் டில்லியில் வேறு படித்தவன்'' என்று எண்ணி, அவர், அவனுக்குத் தனிக் கவனத் துடன் கற்றுக் கொடுப்பார்.

தமிழைப் பிழையில்லாமல் எழுத, அரவிந்தன் தவித் தான். 'பலாப் பழம்' என்று எழுதச் சொன்னால், எந்த 'ல' எங்கே போடுவது, 'கால்' எங்கே நுழைப்பது என்று திக்கித் திணறி, பழாப்பலம், பாலப் பழம், பலப்பழாம், பளாப்பழம் என்று ஒவ்வொரு முறையும், ஒவ்வொரு விதமாய் அவன் எழுதும்போது, சிவஞானத்துக்குச் சிறிதுகூட எரிச்சல் வராது.

"இதற்கும் மேலே, இந்தச் சொல்லைத் தவறாக எழுத முடியாது தம்பி!" செல்ல மாகக் கடிந்து கொண்டு, பொறுமையுடன்

அவர் கற்றுக் கொடுத்த பாங்கினை அவன் வியந்ததுண்டு. கோழிக்கிறுக்கலாக இருந்த அவன் கையெழுத்து, அவருடைய பயிற்சியினால் ஒரே ஆண்டில், முத்துக்களாய் ஒளிர்ந்தன.

எல்லாத் தேர்வுகளிலும், அவன் தமிழில் அமோகமாய் மதிப்பெண்கள் பெற்றபோது, அவனைக் காட்டிலும், அவன் பெற்றோரைக் காட்டிலும் சிவஞானம் உவகை அடைந்தது உண்மை!

மற்ற மாணவர்கள் பயிற்சி வகுப்பு, பள்ளிப் படிப்பு முடிந்து, மேல் வகுப்புக்குச் சென்றவுடன், சிவஞானத்தை மறந்து விடுவதுண்டு. அரவிந்தனோ அதற்கு விதி விலக்கு! மதுரை பொறியியல் கல்லூரியில் படித்தாலும் - மாதம் ஒரு ஞாயிற்றுக் கிழமையாவது, அச்சம்பத்தில் ஆசிரியர் வீட்டில் அவனைப் பார்க்கலாம். அது அவருக்கு எவ்வளவோ ஆறுதல்.

நான்கு ஆண்டுகள் ஓடியதே தெரியவில்லை. படிப்பு முடிந்ததுமே, கலிஃபோர்னியா அலுவலகத்திலிருந்து, வேலை அரவிந்தனைத் தேடி வந்தது. அவன் தந்தைக்கும், அச்சமயம் சென்னைக்கு மாற்றலாகியது. விடை பெற்றுக் கொள்ள வந்த அரவிந்தனுக்குப் புதுத் துணிமணிகளும், ஓய்வு நேரத்தில் அவன் படிக்க ராஜாஜி, கல்கி, மு.வ இவர்களின் படைப்புகளையும் கொடுத்து, வாழ்த்தி, சிவஞானம் ஆனந்தக் கண்ணீருடன் வழி அனுப்பினார். அரவிந்தனுக்கும் பிரிவுத் துயர்தான். எட்டு ஆண்டுகளாகப் பழகிவிட்டானல்லவா? ''அரவிந்த்! அடிக்கடி போன் பண்; கடிதம் எழுது... என்ன?'' என்று பத்து முறையாவது அவர் அவனிடம் கூறியிருப்பார்.

அரவிந்தன் வெளிநாடு போய், ஓர் ஆண்டாகிறது. அங்கு அவனுக்கு ஞாயிறு விடுமுறை என்பதால், தொலைபேசியில், ஒவ்வொரு வாரமும், ஆசிரியரையும், மாமியையும் நலம் விசாரிப்பான். அவனுடைய மென்மையான குரல், அவரைத் தென்றலாகத் தாலாட்டும். அவனுடைய முகவரியைக் கேட்டு, சிவஞானம் கடிதங்கள் எழுதுவார். இயந்திர கதியில் இயங்கும் அந்த உலகத்தில், அரவிந்தனுக்குப் பேனா எடுத்து, எழுத நேரமில்லை. அவ்வளவு பணிப்பளு! ஆனால் அச்சம்பத்தில் உள்ள இணைய வலையைப் பற்றி ஆசிரியரிடம் கேட்டறிந்து, ஒவ்வொரு வியாழனும், தவறாமல், அவருக்கு மின் அஞ்சல் அனுப்பி விடுவான்.

''இந்தத் துரோணருக்கேத்த அர்ச்சுனன்தான்!'' என்று கோமதி சிரித்தபடியே கூறுவதுண்டு. பதில் கடிதம் எழுதி, சிவஞானம் தபாலில்தான் அனுப்புவார். ''ஏங்க, உங்க லெட்டர் அவனுக்குப் போய்ச் சேர எவ்வளவு நாளாகும்? நீங்களும் ஈமெயில் அனுப்பலாமே?'' என்று கோமதி எத்தனையோ முறை சொல்லிப் பார்த்தாள்.

''நம் கைப்பட, அதுவும் தமிழ்ல எழுதும் கடிதத்தில் உள்ள அன்பு, அன்னியோன்யம் ஈமெயில்ல இல்லம்மா! வாசிக்கும்போது யாரோ, யாருக்கோ எழுதினாப்போல இருக்கு... பாவம்! அரவிந்தனுக்கு வேலை அதிகம்... அதனால ஈமெயில் அனுப்புறான் நானும் அப்படியே அனுப்பணும்னு கட்டாயமா என்ன?'' பிடிவாதமாக, அவள் சொன்னதை, மறுத்து விடுவார்.

ஒருமுறை, அரவிந்தன், விடுமுறைக்கு, மதுரைக்கு வந்திருந்த தன் நண்பனிடம், ஆசிரியர் வீட்டில் கொடுக்கச் சொல்லி, உயர்தர சோப்புகள், குடை, கலை நுக்கம் மிகுந்த சுவர்ச் சித்திரங்கள், அழகான சாவிச் சங்கிலிகள் கொடுத்தனுப்பியிருந்தான். கோமதிக்கு ஒரே மகிழ்ச்சி! அந்தப் பொருட்களைப் பூரிப்போடு, அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்களிடம் காண்பித்தாள்.

''ஏங்க, உங்களுக்குச் சந்தோஷமா

''என்ன ஏஜெண்டுய்யா நீ! அமைச்சர் இன்ஷியூரன்ஸ் பாலிசி கேட்டதுக்கு முடியாதுன்னு சொல்லிட்டீங்களாமே?''

''பின்னே, தமது அமைச்சர் பதவியை இன்ஷியூர் பண்ணனும்னு கேட்டா எப்படி சார் சம்மதிக்கிறது?''

– சித்ரா கிருஷ்ணமூர்த்தி



இல்லையா?" என்று, அவரை மீண்டும் மீண்டும் கேட்டும், அவர் 'உம்' என்று ஒற்றைச் சொல்லில்தான் பதிலளித்தார்.

அடுத்த வியாழன் அவர் மின் அஞ்சல் பெறச் சென்றபோது, ஒரு பெரிய பூட்டு அந்த மையத்தின் கதவில் தொங்கியது. அதை நடத்திய இளைஞர்கள் இருவருக்கும் தகராறு ஏற்பட்டு, மூடிவிட்டார்கள் என்று பக்கத்துக் கடைக்காரர் கூறினார். "இந்தக் கிராமத்தில் யார் வீட்டிலாவது மின் அஞ்சல் வசதி இருக்குமா...? அவர்களைத் தொந்திரவு பண்ணினாலும், நன்றாக இருக்காது..!" எண்ணும்போது சிவஞானத்திற்கு மனம் உடைந்தது.

அரவிந்தன் தொலைபேசியில் தொடர்பு கொண்டபோது "இங்க எனக்கு நீ ஈமெயில் அனுப்ப வழியில்லையே தம்பி!" என்று வருத்தத்துடன் விவரம் கூறினார். அதன் பிறகு, அவனிடமிருந்து மின் அஞ்சலோ, தொலைபேசித் தகவலோ ஒரு மாதமாக இல்லை. சிவஞானம் மனம் நொறுங்கிப் போனார். அவரைப் பார்க்க கோமதிக்குப் பரிதாபமாக இருந்தது. அவனுக்குக் கடிதம் எழுதியும் பதில் இல்லை. "அவனுக்கு உடம்பு சரியில்லையோ என்னமோ; பிறகு போன் பண் வாங்க" என்று கோமதி தினம் அவருக்கு ஆறுதல் கூறுவாள்.

ஒரு மதியம், அரவிந்தனிடமிருந்து கடிதம், தபாலில் வந்தது. தன் கைப்பட எழுதியிருந்தான். "அன்புள்ள ஆசிரியர் அவர்களுக்கும், மாமிக்கும் என் பணிவான வணக்கம். அலுவலக வேலை காரணமாக, நான் திடீரென்று ஜெர்மனி போக வேண்டியிருந்தது. அங்கே ஒரு மாதமாகச் சரியான அலைச்சல். அதனால் உங்களுடன் தொலைபேசியில் பேச நேரமில்லை. தயவு செய்து மன்னிக்கவும்..." என்று தொடங்கி, தமிழில், கடற்கரை மணலில் அலைகள் வரிசையாகக் கொண்டு சேர்க்கும் சிறு சோழிகள் போன்று, எழில் மிகு எழுத்துக்கள்! மதுரைக்கு அடுத்த வாரம் வரும் தன் நண்பனிடம், அவருக்கு சிட்டிசன் வாட்சும், மாமிக்கு எலக்ட்ரிக் ரைஸ் குக்கரும் கொடுத்தனுப்புவதாக எழுதியிருந்தான். "கோமதி! அரவிந்தன் கடிதம் எழுதியிருக்கான், பாரேன். கண் ல ஒத்திக்கலாம் போல இருக்கு. நான் சொல்லிக் கொடுத்த தமிழை அவன் மறக்கல. சங்கம் வளர்த்த மதுரைப் பையனாச்சே!..." முகம்



''வக்கீலுக்குப் படிடா படிடான்னு அடிச்சுக்கிட்டேன், கேட்டியா?"

''ஏம்மா இப்ப என்ன ஆகிப் போச்சு?"

''ஜாமீனில் இவரை வெளியே கொண்டு வர அடிக்கடி வக்கீலுக்கு ஆயிரக் கணக்கில் அழ வேண்டியிருக்கேடா!"

– நெல்லை ராஜ்

மலர, குரலில் பெருமையும் பூரிப்பும் பொங்க, அவளிடம் கடிதத்தைக் கொடுத்தார்.

அன்று மாலையே, அரவிந்தனுக்கு, அவர் பதில் கடிதம் எழுதிக் கொண்டிருந்தார். "என்னங்க, அவன் அனுப்புற குக்கர்ல எவ்வளவு அரிசி போடலாம்?" என்று கேட்டவாறு கோமதி காப்பியுடன் வந்தாள். அவர் பேசாமல் இருக்கவே, கடிதத்தின் மீது பார்வையைப் பதித்தாள். 'எங்கள் ஆருயிர்ச் செல்வன் அரவிந்தனுக்கு, உன் அன்புக் கடிதத்தில் ஒவ்வொரு எழுத்திலும், உன் பரிவு, பாசம் கண்டோம். எங்களுக்கு அது போதும்! தயவு செய்து எந்தப் பொருளும் நீ கொடுத்தனுப்ப வேண்டாம். இந்த வயதான ஆசிரியரின் ஒரு விருப்பம். வேண்டுகோள். அதை நிறைவேற்றுவாயா? உனக்கு அங்கு வேலை அதிகம், நேரமில்லைதான். ஆனாலும் சிரமத்தைப் பாராமல், மாதம் ஒரு முறையாவது, உன் கைப்பட, நான்கு வரிகளாவது தமிழில் கடிதம் எழுதி அனுப்பினால், அதைப் பரிசுப் பொருளாகக் கருதி, படித்து, மகிழ்ச்சியுடன் பாதுகாத்து வைப்பேன்...' என்று ஓடிய வாக்கியங்களைப் பார்த்து, "உம்... பிழைக்கத் தெரியாத மனுஷன்" என்று சொல்லியபடி, உள்ளே சென்றுவிட்டாள்.

அவள் சொன்னதைப் பொருட்படுத்தாமல் கடிதத்தை முடித்து, ஒட்டி, "நாளைக் காலைலதான் தபால் எடுப்பான்; இருந்தாலும் இப்பவே பெட்டியில சேர்த்துடலாம்" என்று எண்ணியவாறு, அஞ்சலகத்திற்குப் புதுத்தெம்புடன், நடந்தார் அந்தத் தமிழ்மகன். ●

● கடந்த ஆண்டின் 'சிறந்த, கர்நாடக நட்சத்திரம் யார்?' என ஒரு ஆங்கில தினசரி நடத்திய கணிப்பில் ராகுல் திராவிட், தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். கர்நாடகத்தில் காவிரி, கிருஷ்ணா, நாகப்பா, வீரப்பன், திடுக்கிரன், ஸாரி, தினகரன் என பல போட்டிகள் இருந்தும், திராவிட் அனாயாசமாக வெற்றி பெற்றிருக்கிறார். நியுஸிலாந்தில் இந்திய கிரிக்கெட் அணி அடி மேல் அடி வாங்கிய நேரத்தில் திராவிடுக்கு ஊக்க போனஸ்! ஃபோன் மூலமாகத் தகவல் தெரிந்தவுடன் திராவிட் நெகிழ்ந்து போனாராம். "சிறந்த கிரிக்கெட் வீரன் என்பதை விட, சிறந்த மனிதனாக விளங்கவே ஆசைப் படுகிறேன்'' என்றிருக்கிறார்.

# நெகிழ்ந்த டிராவிட்

● ஒவ்வொரு துறையிலும் பெண்கள் முத்திரை பதித்துக் கொண்டிருக்கும்போது கூட இன்னமும் கருவிலிருந்து அவள் உயிருடன் வெளியே வருவாளா என்பது பெரிய கேள்விக் குறியாகவே இருக்கிறது. கர்நாடகாவிலிருக்கும் 'கார்வார்' எனும் புண்ணிய நகரத்தில் தனியார் மருத்துவ மனையில் மட்டுமல்லாமல் அரசு மருத்துவமனையில்கூட கர்ப்பிணி பெண்களை ஸ்கேன் செய்து பார்த்து ஆணா, பெண்ணா என்று உறுதியாகச் சொல்லி டாக்டர்கள் காசு பார்க்கிறார்களாம். நிதி நிலைமைக்கேற்றவாறு 100 ரூபாயிலிருந்து 1000 ரூ வரை கட்டணம் வசூலிக்கப்படுகிறது. பல டாக்டர்கள் 'ஸைட் பிஸினஸாகவே' நடத்தி ஜமாய்த்துக் கொண்டிருப்பது தெரிய வந்துள்ளது. சுகாதாரம் மற்றும் குடும்ப நல அமைச்சர் திம்மப்பா மேற்படி தகவலை உறுதி செய்துள்ளார். ''அரசு மருத்துவர்கள் மற்றும் பல க்ளினிக்குகளின் மேல் இருபதுக்கும் மேற்பட்ட வழக்குகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. ஸ்கேன் மெஷினைப் பறிமுதல் செய்து விட்டோம். தீர கண்காணிப்பதற்கென ஸ்பெஷல் ஸ்குவாடுகள் நியமித்திருக்கிறோம்'' என்கிறார் அமைச்சர். கருவைச் சுமக்கத்தான் பெண்ணிற்கு உரிமையிருக்கிறது கருவில் இருப்பதற்கல்ல!

● 'தாவரிகே பா தங்கி' என்ற கன்னட திரைப்படம் வெற்றி நடை போட்டுக் கொண்டிருக்கிறது. மெகா சீரியல்களுக்குப் போட்டியாக கண்ணீர்க் காவியம், எப்படி ஹிட்டாச்சு என்று பல ஊகங்கள். வழக்கமான அடிதடி ஸ்டைலிலிருந்து மாறுபட்டு, சாஃப்டான சகோதரனாக ஸ்ரீவண்ணா (சிவராஜ் குமார்) நடித்ததாலா, சகோதரியாக நடித்த புதுமுகம் ராதிகாவினாலா? அல்லது நல்ல இசையினாலா... ஏனு கொத்தில்லா! ஸியோனியைக் கூப்பிட்டுத்தான் பட்டிமன்றம் வைக்க வேண்டும்.

- லதா சேகர்

● முகவை முத்துசாமி, தொண்டி.

? அரசியல், கல்வியியல் – தற்பொழுது எந்தத் துறையில் மாற்றம் தேவை? ஏன்?

! கல்விக்கு முதலிடம் தரும் அரசுக் கொள்கை உருவானால், கல்வி தன்னைப் போல் மேம்பட்டுவிடும். ஆரோக்கியமான மாற்றங்கள் இரு பிரிவுகளிலும் விளையும்.

● திலீப், திருச்சி - 14.

? இந்திய அணி உலகக் கோப்பை கிரிக்கெட்டில் தேறுமா?

! என்ன இருந்தாலும் கிண்டலுக்கு ஓர் அளவு வேணும் திலீப்! நியூஸிலாந்திடம் அடைந்த தோல்வியை இப்படியா குத்திக் காட்டுறது?

● எஸ். பாலச்சந்தர், திருவாரூர்.

? இரவோடு இரவாக லாட்டரிக்குத் தடை விதித்தது சரியா?

! தடை விதித்தது ரொம்ப ரொம்பச் சரி. அதை அள்ளித் தெளித்த அவசரக் கோலமாக, சரியாகத் திட்டமிடாமல் செய்தது தவறு.

● கு. கணேசன், பனங்கோட்டூர்.

? 'வீரப்பன் விஷயத்தில் தமிழக – கர்நாடக அரசுகள் இதுவரை எடுத்துள்ள நடவடிக்கைகளில் மத்திய அரசுக்குத் திருப்தி இல்லை...' என்று மத்திய அமைச்சர் வித்யா சாகர் சொல்லியிருக்கிறாரே?

! இடித்துக் காட்டுவதுடன் நில்லாமல், "நான் பிடித்துக் காட்டுகிறேன்!" என்று மார் தட்டிக் கொண்டு மத்திய அரசு களத்தில் இறங்க வேண்டியதுதானே! மாநில அரசுகளும்தான் உதவி கேட்டு விட்டனவே!

• மசியுமா மத்திய அரசு!

• அவசிய எதிர்ப்பு!

● சு.நா. ராஜேஜ்வரன், பொரட்டுப்பாளையம்.

? 'தராசு' ஸ்பென்ஸர்ஸ் பிளாஸா பக்கம் போவதுண்டா?

! எங்கிட்டே 'விஸா', 'மாஸ்டர் கார்டு' லொட்டு லொசுக்கு எதுவும் இல்லையே!

● கே. சுதர்ஷன், தூத்துக்குடி - 8.

# குளோனிங் கூடாது என்கிறாரே முதல்வர்?

? குளோனிங் கூடாது என்று நமது முதல்வர் அறிவுரை கூறியது குறித்து...?

! முழுமையாக வரவேற்கத் தக்கது. ஆதார மனிதப் பண்புகளைத் தாக்குகிற, செயற்கையான 'உற்பத்தி முறை' என்பதால் நியாய

❑ ரூ. 100/- பரிசு பெறுபவர்:
ஜி.எஸ்.பாலநந்தினி,
திருவிழந்தூர்,
மயிலாடுதுறை - 609 001

* ரூ. 50/- பரிசு பெறுவோர்:
த. சந்தானகுமார்,
30/23. ஜெ.எம்.வளாகம்,
சின்னக்கடை வீதி,
திருச்சி - 620 002

* த. சத்தியநாராயணன்,
55/2, கிழக்கு காலனி,
ஐ.சி.எஃப்,
சென்னை - 600 038

மாய்த் தாக்குகிறார். மேலும் விபரீதமான பரிசோதனைகளைச் செய்து பார்க்கத் தூண்டும் அபாயமும் இருக்கிறது.

● த. ஐயப்பன், காவல்கிணறுபுதூர்.

*? ராணுவ வீரர்கள் பயணம் செய்த ரயில் பெட்டியில் (சியால்டா - ஜம்மு - தாவி எக்ஸ்பிரஸ்) தவறுதலாக ஏறிய இருவரை, அவ்வீரர்கள், ஓடும் ரயிலிலிருந்து தூக்கி வெளியே வீசியது குறித்து...?*

! மிலிடரி உடுப்புத் தரித்தவர்களுக்கே உரிய மனோதத்துவப் பிரச்னை இது. போர் முனையில் காட்ட வேண்டிய முரட்டுத் தனமும் நிர்தாட்சண்யமும் அதற்கு வெளியேயும் தொடர்கிறது.

● த. சந்தானகுமார், திருச்சி – 2.*

*? மாணவர்களுக்கு மதிய உணவு; பக்தர்களுக்கு அன்னதானம்; விவசாயிகளுக்கு மதிய உணவு – நம் நாட்டில் இது போன்ற திட்டங்கள் இருப்பது எதை உணர்த்துகிறது?*

! மனிதாபிமானம் இருக்கிற அளவுக்கு நமது அரசிடம் மதியூகம் இல்லை என்பதை அடுத்து வரும் அயன்புரம் சத்தியநாராயணனின் கேள்விக்கான பதிலில் விரிவாக் கம் காண்க!

● த. சத்தியநாராயணன், அயன்புரம். *

*? விவசாயிகளுக்கு இலவச மதிய உணவு வழங்க தமிழக அரசு 600 கோடி கடன் வாங்குவது பற்றி..?*

! விவசாயிகள் பட்டினி கிடந்து சாகக் கூடாது என்ற நோக்கம் சரி. ஆனால் திட்டம் தவறு. அவர்களுக்கு உணவு சமைத்துப் போட்டு மாளுமா...? வறட்சி நிவாரணப் பணிகள் செய்ய வைத்து, அதற்கு ஈடாகக் கையிருப்பு தானியத்தை விநியோகிக்கலாம். அதைத்தான் விவசாயிகளும் விரும்புகிறார்கள்.

● ஒய்.எஸ்.ப்ரீதா, சென்னை - 12.

*? சென்னை இருபத்தாறாவது புத்தகக் கண்காட்சிக்குச் சென்று வந்தீர்களா?*

! ஓ! தமிழ்ப் புத்தகங்களின் எண்ணிக்கை, தரம், இரண்டும் உயர்ந்து வருவது மகிழ்ச்சி. 'புத்தகங்களை வாங்குங்கள் _ அதுவும் ஒரு சேமிப்பு தான்' என்று நான் சென்ற இனத்தில் ப. சிதம்பரம் பேசக் கேட்டது, அதைவிட மகிழ்ச்சி.

● பா.சு.மணிவண்ணன், திருப்பூர்.

*? சமீப காலங்களில் காங்கிரஸ் தலைவி – சோனியா செயல்பட்டதுபோல் தெரியவில்லையே? என்ன காரணம்?*

! அண்மையில் மஹாராஷ்டிராவில் செயல்பட்டிருக்கிறார். ஆனால்


• புதிய சேமிப்பு!


• 'மகா'(ராஷ்டிரா) குழப்பம்!

தலறான முறையில். மெய்யான உட்கட்சி ஜனநாயகத்தை வளர்க்காத எந்தக் கட்சியும் ஜனநாயகத்தில் நிறைவான நல்லாட்சி தர முடியாது.

● **எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.**

***? எல்லோரும் ஒருங்கிணைந்து முயற்சி செய்தால் லஞ்சம் – ஊழலை எவ்வளவு நாட்களில் ஒழிக்க முடியும்?***

! லஞ்சம் – ஊழலை அடியோடு ஒழிக்க முடியாது; வெகுவாகக் குறைக்க முடியும். இப்போது மக்களின் வாழ்க்கையில், ஒவ்வொரு நடவடிக்கையிலும் அரசு குறுக்கிடுகிறது. அவ்வாறின்றி 'குறைந்தபட்ச அரசு; அதிகபட்ச சுதந்தரம்' என்ற ராஜாஜியின் கொள்கை அமலானால், நிச்சயமாக லஞ்ச ஊழல் ரொம்ப ரொம்பக் குறைந்து விடும். ஆனால், பணமே பிரதானம் என்றாகிவிட்ட இன்றைய அரசியல்வாதிகள் இதைச் செய்வார்களா என்பது சந்தேகம்!

● **ஜி.எஸ். பாலநந்தினி, மயிலாடுதுறை.** ❑

***? நாட்டில் ஐ.எஸ்.ஐ. நடவடிக்கைகள் பற்றிய வெள்ளை அறிக்கையை மத்திய அரசு தயாரித்து வருகிறதாமே? அதை வெளியிடுவதால் பொது மக்களுக்கு என்ன பயன்? பாதுகாப்புத் துறைக்கு மட்டும் தெரிந்தால் போதாதா?***

! பிடியுங்க பரிசை! நல்லா யோசிச்சிருக்கிங்க! விளக்கமா சொல்லணும்னா, இதுவும் பா.ஜ.கவின் 'பாக் மீது பழிபோடும் செயல் திட்டத்தில்' ஓர் அங்கம்தான். ஐ.எஸ்.ஐயைக் கண்காணிக்க வேண்டும். அதன் சூழ்ச்சிக்கு மாற்றுச் சூழ்ச்சி திட்டமிட வேண்டும். மாறாக, ஐ.எஸ்.ஐ. நடவடிக்கைகள் தெரிந்து போயின என்று தம்பட்டமடித்துக் கொண்டால், அந்த அமைப்பு உஷாராகி, செயல் திட்டத்தையும் வியூகத்தையும் மாற்றிவிடாதா! நுணலும் தன் வாயால் கெடும்!

● **ஆர்.கே.லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்.**

***? ஜெயலலிதாவின் டெல்லி பயணம் தமிழ் மக்களுக்குப் பலனளிக்குமா?***

! பயிர் கருகிய பிறகு தாமதமாக வந்துள்ள தண்ணீர், வயிற்றெரிச்சலைத்தான் அதிகப்படுத்தும். இப்போது சற்று இறங்கி வந்து பேசும் வார்த்தைகளை ஒரு மாதம் முன்பு பேசியிருந்தால், ஏதோ கொஞ்சத்துக்குக் கொஞ்சமாவது பயிர் காப்பாற்றப் பட்டிருக்கும்.

## மும்தாஜ் மைனஸ் பத்துகிலோ!

நீண்ட நாளைக்குப் பிறகு, 'தத்தித் தாவுது மனசு' படத்தில் கதாநாயகியாக நடிக்கிறார் மும்தாஜ். இந்தப் படத்தில் இரண்டு புதுமைகள். ஹீரோ கிடையாது. ஓர் இளம் பத்திரிகையாளர் குழுவே அனைத்து தயாரிப்பு வேலைகளையும் ஏற்றுக் கொண்டுள்ளது. இந்தப் படத்திற்காக பத்து கிலோ எடையை குறைத்திருக்கிறார் மும்தாஜ்.





## ஜூலியில் ஜாலியாக!

ஜெயராம் மலையாக நம்பியிருக்கும் அடுத்த படம் ஜூலி கணபதி. இயக்கம் பாலு மகேந்திரா என்பதால் சூப்பர் ஹிட் வண்ணக் கனவுகளுடன் குதூகலிக்கிறார் ஜெயராம். ஜூலியாக நடித்திருக்கும் ரம்யா, செம ஜாலியாக கலக்கியிருக்கிறாராம்.

– ஸ்ரீசக்கரம்





குளோன் செய்யப்பட்ட குழந்தை!

அதாவது ஆண் - பெண் உடலுறவு மூலம் இயற்கையாய்ப் பிறக்காமல் கருமுட்டையுடன் திசு சேர்த்துத் தயாரித்த செயற்கைப் படைப்பு!

ஜார்ஜ் புஷ்ஷிலிருந்து ஜெயலலிதா வரை பல அரசியல் தலைவர்கள் இதற்கு எதிர்ப்பு தெரிவித்திருக்கிறார்கள். இளைய சமுதாயம் இந்தச் செய்தியை எந்தக் கண்ணோட்டத்தில் பார்க்கிறது? சென்னை பல்கலைக் கழகத்தில், உயிரியல் வேதியல் (பயோ - கெமிஸ்டிரி) பிரிவில் படிக்கும் நான்கு மாணவர்கள், இங்கு க்ளோனிங் குறித்து காரசாரமாக அலசுகிறார்கள். சபீதா ஹரிஹரனும், வாணியும் ரிஸர்ச் அசோஸியேட்டுகள். பிரகாஷ் பி.ஹெச்.டி.யும், ஸ்ரீராம் எம்.எஸ்ஸி.யும் படிக்கிறார்கள்.

**சபீதா** : மனித க்ளோனிங்கிற்கு இப்போ என்ன அவசியம் என்பதே புரியலே. 'கடவுள் என்ன, என்னாலும் படைக்க முடியும்'ன்ற ஈகோவா? மனிதனின் ஆசைக்கு எல்லையே இல்லை.

**ஸ்ரீராம்** : தான் ஏதோ ஒரு விதத்தில் அழிவில்லாதவனாக இருக்கணும்னு நினைக்கிற ஆசைதான் க்ளோனிங்கிற்குக் காரணம்.

**வாணி** : கம்ப்யூட்டர் அறிமுகமானப்பகூட இதேமாதிரிதான் சொன்னாங்க. ஆனால் முன்பைவிட மிகக் குறைவான விலைக்கு இப்போ கிடைக்குதே. அதே மாதிரி காலப் போக்கில் க்ளோனிங் என்பது செலவு குறைந்த

"இதெல்லாம் இயற்கைக்கு எதிரானது. கடவுள் நம்பிக்கைக்குப் புறம்பானது."

"எந்த ஓர் அறிவியல் தொழில்நுட்ப சாதனையையும் தடுக்கக் கூடாது."



• பிரகாஷ்

• வாணி

பட்ட பிரதிகளை மாற்றாக அமைத்துக் கொள்ளும் ஆராய்ச்சி வெற்றியடைஞ் சிருக்கு.

**வாணி** : என் மரபணுவை மாற்றிக் கொள்வதன் மூலம் என் பரம்பரைக்கே நீரிழிவு நோய் இல்லாமல் செய்யலாம்

• சபீதா

• ஸ்ரீராம்

தாகப் போய்விடும்.

**சபீதா** : ஒண்ணை ஒத்துக் கணும். மனிதனை மொத்தமா

# க்ளோனிங் குழந்தை : வரமா? பயங்கரமா?

க்ளோனிங் செய்வதற்குப் பதிலாக, அவ னுடைய உயிரணுவைக் கொண்டு மட்டும் பிரதியெடுத்தால் புற்று நோய், நீரிழிவுநோய் போன்றவற்றுக்கெல்லாம் தீர்வு காணலாம்.

**வாணி** : ஆமாம். இதனால் செயலிழந் திருக்கும் உறுப்புகளையோ திசுப்பகுதி களையோ செயல்படச் செய்யலாம்.

**ஸ்ரீராம்** : ஏற்கெனவே நுரையீரல், நரம்பு கள் போன்றவற்றுக்கு க்ளோன் செய்யப் என்று முடிவெடுத்து நான் செயல்படுவதை எப்படி தப்பு சொல்ல முடியும்?

**சபீதா** : அங்கேதான் தப்புப் பண்றோம். என்னதான் மரபணுவின் முழு ரகசியங் களையும் தெரிஞ்சுக்கிட்டாலும் நூறு சதவீதம் குறைபாடே இல்லாத குழந்தையை உருவாக்க முடியாது. க்ளோன் செய் யப்பட்ட குழந்தையின் நோய் எதிர்ப்பு சக்தி, மிகக் குறைவாகத்தான் இருக்கும்னு

கருத்தறாங்க.

**ஸ்ரீராம்** : குழந்தையே இல்லாத தம்பதிகள் க்ளோனிங் மூலம் குழந்தை பெத்துக்கிட்டா அதில் என்ன தப்பு?

**பிரகாஷ்** : அப்படியே இருந்தாலும், தம்பதிக்குள்ளேதான் இந்தக் க்ளோனிங் குழந்தை உருவாகணும்ன்றது அவசியம் இல்லையே. ஏற்கெனவே லெஸ்பியன்கள் கூட இதுபோன்ற குழந்தைகளை உருவாக்கும் முயற்சியிலே வெற்றியடைஞ்சதா கேள்விப்படறோம். இதுபோன்ற வக்கிரங்களுக்கெல்லாம் துணை போவதாலும் மனித க்ளோனிங்கை நான் வெறுக்கிறேன்.

**ஸ்ரீராம்** : க்ளோனிங்கில் வேறொரு சிக்கல் இருப்பதை ஒத்துக்கறேன். முதலில் க்ளோனிங் முறையில் பிறந்த டாலி என்ற ஆட்டுக்குட்டி, அதன் அம்மாவுக்குச் சுமார் நான்கரை வயது ஆனபோதுதான் பிறந்தது. டாலி இன்னும் எவ்வளவு வருடங்கள் உயிரோடு இருக்கும்? ஆட்டின் சராசரி ஆயுள் எட்டு வருடங்கள் என்றால், டாலி இன்னும் எட்டு வருடங்கள் உயிர் வாழ வாய்ப்பு அதிகமா, அல்லது மூன்றரை வருடங்களே உயிர்வாழ வாய்ப்பு அதிகமா? இதையெல்லாம் விஞ்ஞானிகள் நகத்தைக் கடிச்சுக்கிட்டு கவனிச்சுக்கிட்டிருக்காங்க.

---

''வீட்டு அலங்காரக் கலை படிச்சுட்டு வந்தாங்களே உன் மனைவி, வீட்டில் என்ன மாற்றங்கள் செய்தாங்க?''

''சோபா மற்றும் கார்ப்பெட்டுக்கு மாட்சிங்காக இல்லைன்னு என்னை வெளியே போகச் சொல்லிட்டா!''

- எம். சங்கர்



**பிரகாஷ்** : இதெல்லாம் இயற்கைக்கு எதிரானது. கடவுள் நம்பிக்கைக்குப் புறம்பானது.

**ஸ்ரீராம்** : க்ளோனிங் செய்யும் புத்தியும் கடவுள் கொடுத்ததுதானே! நீ சொல்றபடியே பார்த்தாலும், மனித குலத்தை அழிக்கின்றது இப்போது இறைவனே அளிக்கும் கட்டளை மாதிரி தானே ஆகிறது.

**சபீதா** : க்ளோனிங்கிலே இன்னொரு விபரீதமும் இருக்கு. பின்லேடன் மாதிரி ஒரு தீவிரவாதியிடம் அழிக்கும் உணர்வும் அதிகமாய் இருக்கும். பணத்துக்கும் குறைவிருக்காது. இன்றைய தேதிக்கு உன்னாலோ என்னாலோ க்ளோனிங் செய்துக்க ஆசைப்பட்டாலும், அதற்கான பணம் இல்லாததால் முடியாது. ஆனால் பல பின்லேடன்கள் க்ளோனிங் முறையில் உருவானால்?!

**பிரகாஷ்** : அந்தக் காலத்தில் ஹிட்லர் ஒன்பது விதமான முகமூடிகளோடு ஒன்பது நாடுகளை ஆக்கிரமிச்சதாகவும், அவனது நிஜ முகம் எதுன்றதிலே எல்லோருக்கும் குழப்பம் இருந்ததாகவும் சொல்வாங்க. இப்ப க்ளோனிங் வேற பரவலானா அவ்ளோ தான்!

**ஸ்ரீராம்** : ஒண்ணை மறந்துட்டுப் பேசறீங்க. என்னிடமிருந்து க்ளோனிங் பிரதி எடுத்தால், அது என் குழந்தை மாதிரி இருக்குமே தவிர என் மாதிரியே இருந்துவிடாது.

**வாணி** : தவிர நமது நோக்கத்திலே தெளிவிருந்தா, விஞ்ஞான ஆராய்ச்சிகளை நிறுத்தச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. இப்போ இண்டெர்நெட்டினாலே எவ்வளவோ பலன்கள். அதை வக்கிரமான விதத்திலே பயன்படுத்திக்கிறவங்களும் இருக்காங்க. அதுக்காக இண்டெர்நெட்டையே குறை சொல்லலாமா?

**ஸ்ரீராம்** : கரெக்ட். குவான்டம் பிஸிக்ஸின் அடிப்படையிலேதான் அணுகுண்டைத் தயாரிச்சாங்க. அதுக்காக குவான்டம் பிஸிக்ஸே விபரீதமானதுன்னு சொல்ல முடியுமா என்ன?

**வாணி** : இப்ப எவ்வளவோ பறவை மற்றும் மிருக இனங்கள் அழிஞ்சுடும் நிலையிலே இருக்கு. அவற்றைக் க்ளோன் செய்தால் அந்த இனங்களே அழியாமல் தடுக்க முடியுமே.

**ஸ்ரீராம்** : மகாபாரதத்திலேயே க்ளோனிங் இருந்திருக்கு. சூரியன் தன் அம்சமாக கர்ணனை உருவாக்கியது இந்த மாதிரிதானே?

**பிரகாஷ்** : மஹிஷாசுரன் தலையை துர்கை வெட்ட, கீழே சிந்திய ஒவ்வொரு ரத்தத்துளியிலிருந்தும் ஒரு மஹிஷன் தோன்றினான் என்பார்கள். அந்த ரத்தத்தை முழுமையாகக் குடிக்கத்தான் தன் உடலிலிருந்து ஒரு பகுதியை காளியாக துர்கை அனுப்பினாள் என்பார்கள். நம்மில் யாரும் காளிக்கான சக்தி இல்லாதபோது, மஹிஷன்கள் பெருகிக் கொண்டே போனால் என்னாவது? க்ளோனிங்கிலும் இதே பயங்கரம் நடக்கலாமே.

**சபீதா**:குடும்ப உறவென்றது இந்தக் க்ளோனிங்கால் சிதைந்து போகுமே.

**பிரகாஷ்** : இறைவனிடம் இருக்கும் பய பக்தி இதனால் குறைய வாய்ப்பு உண்டு. நம்மைப் படைப்பது இறைவன் என்பதால் உண்டாகும் பயம், இனி போய்விடலாம். "என்னாலேயே ஒரு மனிதனை உருவாக்க முடியும்" என்கிற அகந்தை அதிகமாகும்போது பல நரகாசுரன்கள் தோன்றுவார்கள்.

**சபீதா** : வருங்காலத்தில் எல்லோரும் - சிவப்புத்தோல், செதுக்கிய மூக்கு, விசாலமான கண்கள் இப்படியே வடிவமைச்சுக்கிட்டால் அப்புறம் வாழ்க்கையிலே என்ன சுவை இருக்கப் போகுது?

**ஸ்ரீராம்** : இப்பவே குழந்தையின் முடி எப்படி இருக்கணும்னு ஆசைப்படறோமோ அதன்படி மரபணுவை மாத்திக்கலாம்ன்ற ஆராய்ச்சி ஜெயிச்சுடுச்சாம்.

## எப்படி உருவாகிறது க்ளோனிங் குழந்தை?

க்ளோனிங் ஆராய்ச்சியாளர்களின் முக்கிய இலக்கு இயற்கை முறையில் குழந்தை பெற இயலாத நபர்கள்தான். அதாவது தனது ரத்த சம்பந்தம் உள்ளதாகத்தான் தன் குழந்தை இருக்க வேண்டும் என்ற ஆசை கொண்ட அதே சமயம், குழந்தை உருவாகத் தேவையான விந்து அணுக்கள் இல்லாதவர்கள்.

இதுபோன்ற ஆணிடமிருந்து ஒரு உயிரணுவை எடுப்பார்கள். அதில் உள்ள மையப் பொருளான நியூக்ளியஸ் என்பதை அதிலிருந்து பிரித்தெடுப்பார்கள். இதில்தான் அவனது டி.என்.ஏ. இருக்கிறது. அதாவது நாற்பத்து ஆறு க்ரோமோஸோம்கள் அடங்கிய மரபணுக்கள். ஒரு மனிதனின் தோற்றத்தை நிர்ணயிப்பது இவைதான்.

இப்படிப் பிரித்தெடுக்கப்படும் நியூக்ளியஸை அந்த மனிதனின் மனைவியின் கருமுட்டையோடு இணைப்பார்கள். (அந்தக் கரு முட்டையில் உள்ள க்ரோமோஸோம்கள் ஏற்கெனவே நீக்கப் பட்டிருக்கும்).

இவை இரண்டும் சரியான விதத்தில் சேர, சிறு அளவில் மின்சாரம் ஒன்று பாய்ச்சப்படும். இதன்மூலம் கருமுட்டையும் ஆணின் உடலிலிருந்து நீக்கப்பட்ட நியூக்ளியஸும் இணைந்து ஒரே உயிரணுவாக மாறுகிறது. இந்த உயிரணு பெண்ணின் கர்ப்பப்பைக்குள் வைக்கப்படுகிறது. அதற்குப் பிறகு வழக்கம் போலவேதான் கருச்சுமத்தலும் பிரசவமும். கிட்டத்தட்ட சோதனைக்குழாய் முயற்சியைப் போன்றதுதான் க்ளோனிங் செயல்முறையும். ஆனால் முன்னதில் ஒரு ஆணின் விந்து தேவைப்படுகிறது. க்ளோனிங்கிற்கோ ஒருவரது உயிரணுவே போதுமானது.

ஆனால் ஒன்று, மேற்படி உதாரணத்தில் குறிப்பிட்டது போல் அல்லாமல் ஒரு பெண்ணின் உயிரணுவை கருமுட்டையோடு இணைத்து கூட இப்படி க்ளோனிங் குழந்தையை உருவாக்கலாம். அதாவது எந்த விதத்திலும் ஆணின் தொடர்பு இல்லாமல் ஒரு குழந்தை!

**வாணி** : அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்தான்! அதுக்காக எந்த ஓர் அறிவியல் தொழில்நுட்ப சாதனையையும் தடுக்கக் கூடாது.

**சபீதா** : சில விஷயங்களில் வரும்முன் காப்பதுதானே நல்லது. அடக்கமுடியாத அளவுக்கு ஓர் அரக்கனை வளர்த்துவிட்டு பிறகு வருந்துவதில் அர்த்தமில்லையே.

- ஜி

படங்கள் : **யோகா**

சான் ஏறினால் முழம் சறுக்குகிறதே? இப்போதுதான் பழைய கடன் எல்லாம் தீர்ந்து, பி.எம்.சி.யின் கல்லா கொஞ்சம் கலகலக்க ஆரம்பித்திருக்கிறது. அதற்குள்ளே ஒரு கோடிக்கு வேட்டு வைத்து விட்டார்களே? பிற்பட்ட வகுப்பினருக்காக ஒதுக்கப்பட்டிருந்த வார்டுகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்களில், இதுவரை ஆறு பேர் பொய்ச் சான்றிதழ் கொடுத்திருப்பதாகத் தெரியவந்துள்ளது. உதாரணமாக, 'குர்மி' இனத்தைச் சார்ந்த ஆர்.ஆர்.சிங், 'குன்பி' என்று புருடா விட்டிருக்கிறார். இத்தனைக்கும் முன்னாள் மேயர் வேறு. கேஸ் போட்டால் கம்பி எண்ண வேண்டியதுதான். இந்தத் தொகுதிகளில் மீண்டும் தேர்தல் நடத்தினால், செலவு ஒரு கோடி!. கோடி கொடுத்தேனும் கேடிகளை மாற்ற வேண்டுமாமே?

மாற்ற வேண்டுமாமே... எங்கள் முதல்வரை? முணுமுணுப்பு கோரஸாக, மேலிடத்திலிருந்து விலாஸ்ராவ் தேஷ்முக்கிற்கு அழைப்பு வந்துவிட்டது. சப் போஸ்... வம்பு வட்டாரங்களின் கோஷங்களின்படி சுஷில்குமார் ஷிந்தே சி.எம்.மாகிவிட்டால், தேஷ்முக் எப்படி 'டைம் பாஸ்' பண்ணுவார் என்கிறீர்களா? எல்லாம், நண்பரும் காங்கிரஸ் எம்.பி.யுமான சுனில்தத்தின் அடிச்சுவட்டைப் பின்பற்ற வேண்டியதுதான். விது விநோத் சோப்ராவின் 'முன்னாபாய் எம்.பி.பி.எஸ்.' படத்தில், பிள்ளை சஞ்சய்தத்துடன் நடிக்கப் போகிறார், அரசியல் வாழ்க்கையும் சொந்த வாழ்க்கையும் 'டல்'லடித்துக் கொண்டிருக்கும் சுனில் தத். தேஷ்முக்கின் பிள்ளை ரிதேஷும் இப்போது கதாநாயகனாகி விட்டார். அப்புறமென்ன? அரசியலில் பிரகாசம் குறைந்தால், இருக்கவே இருக்கிறது சினிமா வெளிச்சம்! எப்படி 'தத்'துவம்?

தத்துவம் பேசுகிறார், காவல் துறையின் இணை கமிஷனர் ஸ்ரீதர் வாகலே? 'காபந்து என்பது மனிதச் செயல்; விபத்து என்பது தெய்வச் செயல்' என்கிறாரே? காட்கோபர் பஸ் டெப்போ குண்டு வெடிப்புச் சம்பவத்தில், கைதான காஜா யூனஸை அழைத்துக் கொண்டு, மூன்று போலீஸ்காரர்கள் 'வான்'னில் பயணித்தார்களா, அவுரங்காபாத் அருகே எதிர்ப்பட்ட லாரி இதனுடன் மோதியதில் மூன்று போலீசாரும் மூர்ச்சையாகிவிட, யூனஸ் மட்டும் தப்பி ஓடிவிட்டார். இதைத்தான் தெய்வச் செயல் என்கிறார்கள். போகட்



• சஞ்சய்தத்



• ப்ரீத்தி



* தூக்கி விளாசுங்க... சிக்ஸர்!

டும்; அதே வழக்கில், சம்பவத்துக்கு சூத்திர தாரியான இம்ரான் ரெஹ்மானை மெனக் கெட்டு துபாயிலிருந்து பிடித்து, கைது செய்திருக்கிறார்கள். யூனஸுக்கு உதவி செய்த தெய்வத்தால் ரெஹ்மானுக்கு 'ரெஹம்' (கருணை) செய்யத் தெரியாதா?

'தெரியாதே' என்று ஆண் சிங்கங் களெல்லாம் நடுங்கிக் கொண்டிருந்தபோது, 'தெரியும்' என்று தைரியமாக ஒரு பெண்புலி உறுமிற்று! ஆம்... பரத்ஷா வழக்கில், ஷாருக், சல்மானிலிருந்து ராகேஷ் ரோஷன் வரை, எல்லோரும் முன் சொன்னதற்கு மாறாக, 'எங்களுக்கு அண்டர் வர்ல்டையே தெரி

# சத்தியத்துக்கு 'ஜிண்டா'பாத்!

யாது' என்று சத்தியம் செய்ய, ப்ரீத்தி ஜிண்டா மட்டும் 'எனக்கு அண்டர்வர்ல் டிடமிருந்து ஃபோன் வந்தது. சோரி சோரி படத்துக்காக எனக்கு வழங்கப்பட்ட தொகை இருபத்தைந்து லட்சங்கள்தான், அதுவும் கொஞ்சம் கொஞ்சமாக. ஆனால் டெலிஃபோன் குரல் என்னை ஒரேயடியாக ஐம்பது லட்சம் கேட்டு மிரட்டியது' என்று ஒப்புதல் வாக்கு மூலம் அளித்திருக்கிறார். ப்ரீத்தி ஜிண்டா இல்லை. அவர் 'ப்ரிட்டி ஜிண்டா' சத்தியத்தின் அழகே அழகு!

அழகு முகங்களைத் துரத்திக் கொண்டிருக்கும் தேவ் ஆனந்த்! இப்போது துரத்திக் கொண்டிருப்பது ஹில்லாரி கிளிண்டனை... உடனே கற் பனையை சிறகடிக்க விடாதீர் கள்! எல்லாம் அவர் அடுத்த படமான, 'லவ் அட் டைம்ஸ் ஸ்கொயர்' ரின் ப்ரீமியருக்குத் தான். 'நியூ இயரை'க் கொண் டாட வேண்டுமென்றால் அதை நியூயார்க்கில், அதுவும் டைம் ஸ்கொயரில் கொண்டாட வேண்டுமாம். பனியின் நடுவே முக்கோணக் காதல் கதையை 'ஷூட்' பண்ணியது அவ்வளவு 'த்ரில்லிங்'காம்!

'த்ரில்லிங்காகத்' தானிருக்கிறது நியூசிலந்தில் நம் சுனில் கவாஸ்கர் பெயரி லும், பிஷன்சிங் பேடியின் பெயரிலும் தெருக்கள் இருக்கின்றன என்பதைக் கேட் டால், .. ஆனால் அதெல்லாம் பழைய கதை; கிட்டி முட்டி ஒரே ஒரு வெற்றியை அடைந் திருக்கும் நம் கிரிக்கெட் அணியின் நியூசி லாந்து டூரைப் பற்றி, உலா வரும் கிண்டல் களைக் கேட்டால் 'சில்லிங்'காக இருக்கிறதே! பாருங்களேன்... நம் கேப்டனின் மனைவி, நியூசிலாந்துக்குத் தொலைபேசி, 'நான் கேட் டிருந்ததை எல்லாம் வாங்கிட்டீங்களா?'' என்றாராம். 'வாங்கத்தான் நினைக்கிறேன் கண்மணி. வெளியே தலைகாட்ட முடியவில்லையே' என்ற பதில் வந்ததாம். 'பேசாம ஒரு புடைவை யைச் சுத்திக்கிட்டு போங்க. யாருக் கும் தெரிய வராது' என்று மனைவி அறிவுரைத்ததும், அப்படியே வெற்றிகரமாக ஷாப்பிங்கை முடித் தாராம் கேப்டன். கடைசிக் கடை யில் 'என்ன தலைவா'? என்று ஒரு புர்கா பெண்மணி வினவியதும், தூக்கிவாரிப் போட்டதாம். 'எப்பிடிக் கண்டுபிடிச்ச?' என்று இவர் அலறவும் 'ஷ்... கலங்காதீங்க. நான்தான் உங்க வைஸ் காப்டன்' என்ற பதில் வந்ததாம். ஹூம்... அதுதான் கபிலும், ஸ்ரீகாந்த்தும், ரணதுங்காவும் மந்திரா பேடிக்கு ட்ரெயினிங் கொடுக்க ஆரம்பித்து விட்டார்களோ..? (எக்ஸ்ட்ரா இன்னிங்ஸ் ஸில் இப்போது ரூபி பாட்டியாவுக்கு பதிலாக மந்திராதான்!)

- ஜெய்ஸ்ரீராஜ்

**"நான் ஆர்த்தி. பி.காம். முடித்து விட்டேன். மேலே என்ன படிக்கலாம் என்ற குழப்பத்தில் இருக்கிறேன்."**

**"நான் சதீஷ். ஐ.ஐ.டியில் இஞ்சினியரிங் படித்திருக்கிறேன். இன்ஃபர்மேஷன் டெக்னாலஜி துறைக்கு மாறிவிடலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்."**

**"நான் ராம். அடுத்த வாரம் ஓர் இன்டர்வியூ இருக்கிறது. நினைத்தாலே நெர்வஸாக இருக்கிறது. எப்படி நடந்து கொள்ள வேண்டும்...?"**

**நான் தீபா, நான் ரவி... நான் சரவணன்...**



# கைகொடுக்கும் கண்ணன்!

இளைய தலைமுறைக்கு மேற்படிப்புக்கும், வேலை வாய்ப்புக்கும் வழிகாட்ட, மிகச் சரியான, அறிவியல் ரீதியான, முறையான அமைப்பு ஏதும் இந்தியாவில் இல்லை என்பதை அனுபவத்தில் கண்டறிந்தவர் 'கேரியர்ஸ் இந்தியா'வின் முதன்மை நிர்வாக அதிகாரி ஆர்.கண்ணன். பாரி கம்பெனியிலும், இந்துஸ்தான் லீவர் நிறுவனத்திலும் மனிதவள மேம்பாட்டுத் துறை அதிகாரியாக இருந்தவர்.

"மாணவ மாணவியருக்கு, மேலே என்ன படிப்பது என்று வழி காட்ட நம்பகமான அமைப்பு ஏதுமில்லை. அதனால்தான் எங்கள் வெப் தளத்தில், மாணவர்களுக்குத் தரப்படும் பாஸ்வேர்டை அடித்துவிட்டு, சுமார் முக்கால் மணி நேரம் செலவிட்டு, அதில் எழுப்பியிருக்கும் கேள்விகளுக்கு மாணவர்களைப் பதில் அளிக்கச் சொல்லுகிறோம். அந்த பதில்களை அடிப்படையாக வைத்து, அவர்களுடைய ஆர்வம், விருப்பம் எல்லாம் எப்படி இருக்கிறது என்று கணித்து, அவர்களுக்கு உகந்த படிப்பைச் சொல்லுகிறோம்!" என்கிறார் கண்ணன்.

சென்னைப் பல்கலைக் கழகத்தின் மனவியல் துறைத் தலைவர் டாக்டர் பார்வதி, பள்ளி மாணவர்கள், கல்லூரி மாணவர்கள் என இரண்டு பிரிவினருக்கும் ஏற்ற வகையில் இதற்கான கேள்விகளைத் தம் துறையிலுள்ள வல்லுனர்கள் உதவியோடு உருவாக்கிக் கொடுத்திருக்கிறார். எல்லாமே ஆப்ஜெக்டிவ் டைப் கேள்விகள்.

"இப்போதைக்குத் தனியார் ஆங்கில மீடியம் பள்ளி மாணவ மாணவியருக்கு மட்டுமே உதவும் வகையில், இந்த புரோக்ராம் அமைக்கப் பட்டிருக்கிறது. காரணம், இஞ்சினியரிங், மருத்துவம், ஐ.ஏ.எஸ். போன்ற நுழைவுத் தேர்வுகளில் ஆங்கிலமே பயன்படுத்தப்படுவதால்தான். காலப் போக்கில் பிற மொழிகளிலும் கூட இவற்றை நாங்கள் அறிமுகப் படுத்தக் கூடும்" என்கிறார் கண்ணன்.

தில்லியிலுள்ள கேந்திரிய வித்யாலயா தலைமை அகம் இவர்களது சேவையைத் தனது பள்ளிகள் அனைத்துக்கும் பயன்படுத்திக் கொண்டிருப்பதோடு, இவர்கள் முயற்சியைப் பாராட்டியும் இருக்கிறது. மும்பை, பெங்களூர், தில்லி, சென்னையிலுள்ள ஏராளமான தனியார் பள்ளிகளும் இந்தப் பட்டியலில் இருக்கின்றன.

கல்லூரிகளின் முகவரிகள், பாடங்கள், அயல் நாட்டுக் கல்வி வாய்ப்புகள்,

மெடிகல் – இஞ்சினியரிங் நுழைவுத் தேர்வுக்கான கேள்விகள் வங்கி, திறமையைக் கணிக்கும் சோதனை, எம்.பி.ஏ, எம்.சி.ஏ, ஐ.ஏ.எஸ். விவரங்கள் எல்லாமே கம்ப்யூட்டர் திரையில் பார்க்கலாம்.

பள்ளிகளில் இந்த வசதியை அறிமுகப்படுத்தி சுமார் ஒரு வருடமே ஆகிறது. ஆனால் ஏராளமானவர்கள் பயனடைந்திருப்பதாகத் தகவல்கள் தெரிவிக்கின்றன.

பல வகையான நிறுவனங்களுடன் இவர்களுக்குத் தொடர்பு இருப்பதால், வேலைக்கு விண்ணப்பிக்கும் நபர்களைத் தேர்வு செய்வதில், இவர்களைத்தான் நாடுகிறார்கள். இது ஒரு பிரிவு என்றால், இன்னொரு பிரிவு 'ஸ்ட்யூடன்ட் விங்'. அமெரிக்காவில் உள்ள ஒரு பிரபல மனவியல் நிபுணர்கள் நிறுவனத்தின் உதவியோடு, கூட்டு முயற்சியாக, கேரியர் மேனேஜ்மென்ட், கேரியர் பிளானிங் என்று மாணவர்களுக்கு உதவ என்றே இயங்குகிறது இது.





பள்ளி அல்லது கல்லூரி, மாணவ – மாணவியரிடம் சொந்தமாக கம்ப்யூட்டர் இல்லாத போது, 'பாஸ்வேர்டை' மட்டும் வாங்கி வைத்துக் கொண்டு செயல்படுவது எப்படி என்ற கேள்வி எழலாம். இப்போதுதான் வீதிக்கு ஒரு கம்ப்யூட்டர் ப்ரௌஸிங் சென்டர் இருக்கிறதே. அதில் அரை மணி செலவிட்டால் போதும்.

ஆனால் சத்யம் கம்ப்யூட்டரில் 'I way' கிளைகள் இவர்களுக்கு உதவ முன் வந்திருக்கின்றன. நாடு முழுவதிலும் உள்ள சுமார் 750 கிளைகளில், குறைந்த கட்டணத்துக்கு, இந்த வசதி கிடைக்கிறது!

"இந்த வசதிகளைப் பயன்படுத்திக் கொள்ள, கேரியர் இந்தியா நிறுவனம் மாணவ – மாணவியரிடம் வசூலிக்கும் வருடச் சந்தா 250/- ரூபாய் மட்டுமே. இதைக் கட்டிவிட்டால் ஐடென்டிடி கார்டும், அதில் தனி 'பாஸ்வேர்டு'ம் கிடைத்துவிடும்!" என்கிறார் கண்ணன்.

'அடடா, நாம் படிக்கிற காலத்தில் இப்படி எல்லாம் உதவ ஓர் அமைப்புக்கூட இருக்கவில்லையே!' என்று 'பெரிசுகள்' பெருமூச்சு விடக்கூடும்.

சந்திப்பு : சாருகேசி
படம்: யோகா



இந்தப் பிரக்ருதி அல்லது உலக விஷயங்களுக்கு மாயா என்று பெயர். மாயை என்பது நம்மை ஒவ்வொரு இடத்திலேயும் மடக்கி விடுகிறது.

உபன்யாஸம் நடத்துகிறோம்; உபன்யாஸம் கேட்கிறோம். அந்த சமயத்திலே ரொம்ப தெளிவான ஞானம் வாய்க்கிறது. ஆனால், உபன்யாஸம் முடிகிறபோது நடப்பது என்ன..? சொல்கிறவர்களுக்கும் சரி, கேட்கிறவர்களுக்கும் சரி.. ஏற்படுகிற ஞானம் இருக்கிறதே, அது அப்படியே நிலைத்து இருந்துவிட்டால் என்ன ஆகும்...? எல்லோரும் உத்தமர்களாகி விடுவோம் அல்லவா!

போம்!

'ஸ்மசானாம் தே புராணாம்தே' என்றார். – சிதையிலே வைக்கிறபோது 'அடடா! எப்பேர்ப்பட்ட மகான்' என்று எல்லோரும் வியப்பார்கள். 'அவருக்கே இந்த கதி வந்து விட்டதா!' என்று வருத்தப்படுவார்கள்.

'இப்படி ஒன்றுக்கும் பிரயோஜனமில்லாது போய்விட்டதே இவர் வாழ்க்கை! ஒரு காலத்திலே எப்படி இருந்தார்..! இப்படி ஏகமாக ஏதேதோ தோன்றுமாம்! 'நாளையிலிருந்து நாமும் ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்..' என்று தோன்றுமாம்.

சாஸ்திரம் என்ன சொல்கிறது? இந்த

# குறையொன்றுமில்லை

ஆனால், நடப்பது என்ன...? நினைத்துக் கொண்டே இருப்போம் – உபன்யாசம் முடிகிற சமயத்திலே கூட நினைப்போம் – 'நாளையிலேயிருந்து ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ரொம்ப ஜாக்கிரதையாக இருப்போம்... என்று தோன்றும். ஆனால் அந்த எண்ணம் சீக்கிரமே போய் விடும்.

அடுத்தது நாம் போய் என்ன பண்ணுவோம்...? தூக்கம்! உபன்யாஸம் கேட்கிறபோது ஏற்பட்ட வைராக்கியத்துக்கும் சேர்த்து தூக்கம்! எல்லாம் தூக்கத்திலே போய்விடும்!

மறுநாள் பிராதஹ் காலம், வைராக்கியத்துக்கும் நம் வாழ்க்கைக்கும் சம்பந்தமில்லாமல் ஏதோ இருந்து கொண்டிருப்போம். வெறுமே இரண்டு மணி நேரம் கேட்பதற்கானதுதான் உபன்யாஸ விஷயம். வாழ்க்கைக்கும் அதற்கும் சம்பந்தமே இல்லை, என்பது போல்தான் வாழ்ந்து கொண்டிருப்

மாதிரி ஸ்மசானத்தில் சிதை வைக்கப் போனால், அப்படியே வீட்டுக்குத் திரும்பாதே என்கிறது! ஒரு வேளை பிராதஹ் காலத்திலேயே சம்ஸ்காரம் ஆனாலும், சாயங்காலம்தான் வீடு திரும்ப வேண்டும். நட்சத்திர மண்டலங்களெல்லாம் தோன்றிய பிற்பாடு, கோதூளி காலத்திலே, ஸ்நானம் பண்ணிவிட்டு வீட்டுக்கு வரவேண்டும். அப்போது தான் ஸ்மசானத்துக்குப் போய் வந்த தீட்டு நீங்கும், என்கிறது சாஸ்திரம்.

ஆனால் என்ன ஆகிறது...? நாம் செய்கிற ஸ்நானமானது, நமது வைராக்கியத்துக்கும் சேர்த்துச் செய்கிற ஸ்நானமாகப் போய்விடுகிறது! அந்த வைராக்கியத்தை நிலைத்து நிற்கவிடாமல் உலகமானது எல்லாவற்றையும் மறைத்து விடுகிறது.

அப்படி மாயையானது நமக்கும் பகவானுக்குமிடையிலே திரையாக எப்போதும் இருந்து கொண்டிருக்கிறது. அதனால்தான் 'திரதீ – யகராதா' என்று பாடினார்

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

தியாகராஜ ஸ்வாமி.

'திரை தீ' என்றால் என்ன அர்த்தம்? அஞ்ஞானமாகிற தீயை அகற்று; அவித்யை என்கிற திரையை அகற்று... என்று அர்த்தம்.

கோயிலில் பகவானைப் பார்க்கப் போகிறோம். திரை போட்டு விடுகிறார்கள். உள்ளே திருவாராதனம் நடக்கிறது. திரை திறந்தவுடனேயே பார்க்கிறோம். அந்த மாதிரி, இந்தப் பிரக்ருதி சம்பந்தமானது பகவானுக்கும் நமக்கும் இடையிலே திரையாக இருக்கிறது. அதை நாம் விலக்கி யாக வேண்டும். அந்த சம்பந்தத்தை அறுத்து, தூர தள்ள வேண்டும். அப்போதுதான் அவனுக்கும் நமக்கும் நேரடியான சம்பந்தம் ஏற்படும். அவனை அடைய விடாமல் தடுப் பது பிரக்ருதி சம்பந்தம்தான்.

அடுத்த இதழில்...
அருண்சரண்யா எழுதும்
நிழல்

திருவாய்மொழி 1102 பாசுரமும் இந்த ஐந்து அம்சங்களைத்தான் விளக்குகின்றன. வேத – இதிஹாஸ – புராணங்களும் இதையே விளக்குகின்றன.

அதிலே நாம் அடைய வேண்டிய பரப்ரும்மம் எப்படிப்பட்டது, என்று கேட் டால், அதை சஹஸ்ரநாமம் சூட்சுமமாக **பரமாத்மா** என்று குறிப்பிடுகிறது.

பரமாத்மா என்றால், அவனுக்குச் சமானமான ஆத்மா இல்லை; அவனுக்கு மேலான ஆதமா இல்லை! பரமாத்மா என்ற இந்த ஒரு சப்தத்தினாலேயே அவன் பெருமை அனைத்தும் நமக்குத் தெரிகிறது. 'இந்த ஒரு சப்தத்தை நன்கு உச்சரியுங்கள்' என்று இவ்வளவு கருத்தையும் தன்னுள்ளே அடக்கிக் கொண்டிருக்கிற உயர்ந்த வான் மயம் 'ஓம் பரமாத்மனே நம! என்பது.

சமகம் என்கிற மந்திரம், முடிகிற போது, எல்லாவற்றுக்கும் அதிபதி அந்த பரம்பொரு ளான ஸ்ரீமன் நாராயணனே என்று முடியும். ஒற்றைப்படை எண்கள், இரட்டைப் படை எண்கள், எல்லாவற்றுக்கும் அவன் அதிபதி! ஒன்றுக்கும் அவனே அதிபதி; ஐந்துக்கும் அவனே அதிபதி. ஏழு, ஒன்பது, பதி னொன்று, பதிமூன்று என்று இப்படி வரிசை யாகச் சொல்லிக் கொண்டே வந்து, முப்பத்து மூன்றில் கொண்டு போய் நிறுத்துகிறது. மறுபடியும் நான்கில் ஆரம்பித்து நாற்பத் தெட்டில் கொண்டு போய் முடிக்கிறது – இரட்டைப் படை எண்கள் அத்தனையும்.

இப்படி நிறுத்தி, எல்லாவற்றுக்கும் அவனே அதிபதி. அவன்தான் காரணம் – நாயகன் என்கிறது.

'ஒன்று' என்கிற எண்ணுக்கு அவன் நாயகன் என்று ஏன் சொல்ல வேண்டும்...? இதை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும்.

உபநிஷத் என்ன சொல்கிறது...?

'ஏகமாவத் த்விதீயம் ப்ரும்மா' என்கிறது. சாந்தோக்யத்திலே பார்த்தோமானால், இது இடம் பெற்றிருக்கும் '**அது** ஒன்றுதான் ப்ரும்மம்' என்று பொருள். அதைப் போல் வேறொன்று இல்லை என்பதால் அத்விதீய மானது அது.

ஆகையினால், அவரைப் போன்று இன் னொருவர் இல்லை என்றால், அத்விதீய மானவர் அவர் – எல்லா விதத்திலும் சிறப்பு மிக்கவர் என்று அர்த்தம்.

அப்படிப் பொருள் கொண்டு ராமானுஜர் விசிஷ்டாத்வைதத்தைப் பிரவர்த்தித்தார். ராமானுஜர் புதிதாக விசிஷ்டாத்வைதத்தை உண்டாக்கவில்லை. ஏற்கெனவே இருந்த விசிஷ்டாத்வைதத் தைத்தான் பரப்பினார். அது மேலும் உயர்ந்து, நன்கு பிரகாசிக்கச் செய்து உலகுக்குக் காட்டினார்.

நாத முனிகளிடத்தில் ஆரம்பித்து, ஆள வந்தாரால் நன்கு காக்கப்பட்டு, ராமானுஜ ரால் வளர்க்கப்பட்டு வந்த சம்பிரதாயம் விசிஷ்டாத்வைதம்.

அத்விதீயம் என்றால், 'மற்றொன்று இல்லை' என்று பொருள். ஆதி சங்கர பகவத் பாதாள் சொல்வது அதுதான் – 'பிரும்மம் ஒன்றுதான் சத்தியம். மற்றது எல்லாம் கானல் நீர் போலே' என்றார்.



**கலகலக்கும் மினி தொடர் ஆரம்பம்...**

தூரத்திலேயிருந்து கானல் நீரைப் பார்த்தால் ஏகமாக நீர் ஓடுகிற மாதிரி தெரியும். கிட்டே போனாலோ ஒன்றும் இருக்காது. இதெல்லாம் பிராதிபாதிகம் _ வெறும் தோற்றம்; பரமார்த்திகம், பகவான் ஒருத்தன் தான்! அந்தத் தோற்றம் கலைந்து விட்டதானால், அதைப் போய் நாம் விசாரிப்போமேயானால்... உண்மைப் பொருள் என்ன என்பது தெரியும்.

ரஜ்ஜு ஸர்ப நியாயம் என்று இதற்குப் பெயர் — ஒருத்தர் போய்க் கொண்டே இருக்கிறார். எதிரிலே வளைவு வளைவாக இருக்கிறது. பாம்பு என்று பயப்படுகிறார். ஆனால் அது பாம்பாக இருந்தால் நகர்ந்து போகுமே! போகவில்லை. பின் அது என்ன...? 'பூமி வெடித்த வெடிப்பு அப்படித் தெரிகிறதோ!' என்று எண்ணுகிறார். ஆனால், அதுவும் இல்லை. ஒரு வேளை யாரோ குடத்தில் ஜலம் எடுத்துக் கொண்டு போகிறபோது அப்படி ஒழுகியிருக்கிறதா? இல்லை! அதுவும் இல்லை. ஜலமாயிருந்தால் ஆவியாகப் போயிருக்க வேண்டுமே; அப்படியே இருக்கிறதே.... — இப்படி நினைத்துக் கொண்டே இருக்கையில், எதிரே ஒருத்தர் வருகிறார் — அதை மிதித்துக் கொண்டே வருகிறார்.

வந்தவரிடம் இவர் கேட்டார், "அது என்ன...?

"அது வைக்கோலால் திரிக்கப்பட்ட கயிறு (ரஜ்ஜு)" என்று சொல்கிறார் அவர்! ஆனால், தோற்றத்திலே பூமி வெடித்த மாதிரியும், பாம்பு மாதிரியும் நம்மை பிரமிக்க வைத்துவிடுகிறது இல்லையா! அந்த பிரமை எப்போது போகும்?

உண்மை தெரிந்த பிறகுதான் போகும்!

பரப்ரும்மமான அந்த எம்பெருமானைப் பார்த்த பிற்பாடு, உணர்ந்த பிற்பாடு- அவனைக் குறித்த ஞானம் வந்தடைந்த பிறகு... அவித்யை என்பது நம்மை விட்டுத் தொலையும். பரப்ரும்மமாக நாமே இருப்பதை உணர்வோம் — என்பது அத்வைதம்.

உபநிஷத் சொல்கிறபோது, 'ஆதியிலே நாராயணன் ஒருவனே இருந்தான்' என்கிறது. எல்லாம் ஜலமாயிருந்தது என்கிறது. அவனுடைய நாபியிலிருந்து தாமரைப் புஷ்பமானது உண்டாயிற்று.

அந்த நாபிக் கமலத்திலே தாமரைப் புஷ்பத்திலே பிரும்மாவை உண்டாக்கினான். ஆகவே எல்லாவற்றுக்கும் முழு முதல் பீஜம் ஸ்ரீமன் நாராயணனே!

— இந்த ஏகாகமான, ஏகமான, அத்விதியமான பரப்ரும்ம ஞானம் நமக்குச் சித்திக்க வேண்டும் என்றுதான், உபநிஷத் சமகம் வேண்டுகிறது. இதற்கு லௌகிகமாய் விளக்கம் சொல்லி — உலகிலே ஒற்றைப் படையிலான விஷயங்கள் எல்லாம் நமக்குக் கிடைக்கட்டும், என்று ப்ரார்த்திப்பதாகச் சிலர் விளக்குகிறார்கள். ஆனால் அது இல்லை தாத்பர்யம் — ஏகமாய், அத்விதியமாய் இருக்கும்படியான பரப்ரும்ம ஞானம் நமக்குப் பரிபூரணமாய் வேண்டும். சங்கோசமில்லாத தெளிவான ஞானம் ஏற்பட வேண்டும் என்பதே பிரார்த்தனை.

(வளரும்)



# குல்லு மல்லு

—கதிர்


மல்லு,
கம்ப்யூட்டர் எல்லாம்
வைச்சுக்கிட்டு என்ன
பண்ணிக்கிட்டிருக்கே?
இந்த இசை உலகமே
திரும்பிப் பாக்கிறமாதிரி ஏதாவது
செய்யணும்னு பாக்கறேன்...
முடியாது போலிருக்கு.


நீ 70 எம்.எம். ஸ்க்ரீன்
சைஸுக்கு முன்னாடி நின்னா
எப்படித் திரும்பிப் பார்க்கும்?
பின்னாடி நின்னு கூப்பிடு.
திரும்பிப் பார்க்கும்.
நீ ஏன் பேச
மாட்டே?


நீயும்தான்
கரடியா
கத்தற.
ஒருத்தனும்
திரும்பிப் பாக்க
மாட்டேங்கறானே...
அதுக்கெல்லாம்
பாடணுமோ,
என்னவோ?


இல்லடா மல்லு.
நீ இசை உலகத்துக்கு
ஏதாவது செய்யணும்னா,
அதை வெளியில
இருந்துதான்
செஞ்சாகணும்.
இது
ரொம்ப
ஓவர்!


நீ மட்டும்
'பேஷன்'
பீல்டை
விட்டு
வெளியில
வந்துடாதே!


ஏண்டா?


உன்னைப் பார்த்த
பிறகுதான் நாம ஒண்ணும்
குறைச்சல் இல்லைன்னு
நிறையப் பேர் தில்லா
இறங்கறாங்க!





**MARCHING TOWARDS CENTENARY**




**1904 2004**

**TRADITIONAL BANKING - ENDURING RELATIONSHIP**

*"இன்னிக்கு*
*சைக்கிள் !*
*நாளைக்கு*
*மோட்டார் பைக் !!"*

**CUB** வழங்கும் **Eazy Ride**

இருக்கும்போது

மோட்டார் பைக் / ஸ்கூட்டர்

வாங்குவது கடினமில்லை.

---

சுலபமான கடன் வசதி.

---

எளிமையான விதிமுறைகள்.

---

**CUB Eazy Ride**

*பைக் - ஸ்கூட்டர் கனவுகளுக்கு சக்கரம்.*




**சிட்டி யூனியன் பாங்க் லிட்.,**

பதிவு அலுவலகம் : கும்பகோணம் - 612 001.
அந்நியச் செலாவணி அங்கீகாரம் பெற்ற வங்கி
Tel : 0435-2432322 Fax : 0435-2431746
**E-mail : cubco_kmb@sancharnet.in**
**Website : http://www.cityunionbank.net**

---

*உங்கள் வளர்ச்சிக்கு வழிகாட்டும் வங்கி !*

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered. No. TN / PMG (CCR) 572 / 03 - 05 *
Licensed to post without prepayment under PMGis Licence No. WPP 358 * Registered as a Newspaper in Srilanka


# ஒரு மசாலாவில் நீங்கள் என்னவெல்லாம் எதிர்பார்க்கிறீர்கள் ?



அந்தக்காலத்தில வத்தல், மல்லி, மிளகு, இப்படி எல்லாத்தையும் தரமானதா பாத்து வாங்கி, வறுத்து, இடிச்சி பக்குவமா தயாரிப்போம் அதோட வாசனை ஊரெல்லாம் மணக்கும். அந்த மாதிரி இருக்கனும்.






அம்மாவே சமைச்சு போட்ட மாதிரி ருசி இருக்கனும்.






இரசாயன சேர்க்கையும், செயற்கையான வர்ணங்களும் இருக்க கூடாது.






வாசம் தூக்கலா இருக்கனும்.
உடம்புக்கு எந்த கெடுதலும் பண்ணக்கூடாது.



சமைச்சு போட்டா, எல்லோரும் சப்புக்கொட்டி சாப்பிடனும்.






வீட்டுக்கு வந்த விருந்தினர் இவ கைப் பக்குவம் யாருக்கும் வராதுன்னு பாராட்டனும்.






நியாயமான விலையில, பட்ஜெட்டுக்குள்ள இருக்கனும்.



இன்னும் வேணும், வேணும்னு சொல்ற அளவுக்கு டேஸ்டா இருக்கனும்.




உங்களின் அனைத்து விருப்பங்களையும் நிறை வேற்றும் மசாலா **மாமிஸ் மசாலா.**





மாமிஸ் மசாலா

**மாமி புட்ஸ் (பி) லிட்.,**

H.O : (New No) 164, புல்லலக்கோட்டை ரோடு, விருதுநகர் 626 001.
Ph. : (04562) 267838, 243601 Fax: 244168,
B.O : 2/1.சக்கரபாணி தெரு, மேற்கு மாம்பலம் ரயில்வே லைன் அருகில், சென்னை 33. Ph.(044) 24724500,
E-mail:mail@maamis.com. Visit : www.maamis.com

SITA - 1016